# கோபாலன்




பூ. மு. முருகேச முதலியார்
எழுதியது





சென்னை :

ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

1927

ரெஜிஸ்டர் செய்தது] [விலை 6 அணா

# முகவுரை

நமது தேசத்து நூல்களுள்ளே பக்தி வைராக்கிய ஞானங்களை விளக்கும் புராணப்பகுதி ஒரு முக்கிய பகுதியாகும். புராணங்களனைத்தும் பொய்க் கதைகளே யென்று சொல்லுவோர் அவற்றாற் பெறப்படும் நற்பயன்களை இழப்பர். புராணங்கள், தெய்வங்கள் இவ்வுலகத்து நிகழ்த்திய வீரச்செயல்களை அணிபெற எடுத்துச் சொல்லு முகத்தாற் பல நீதிகளையும் புகட்டும். ஆயினும் அவை விரிந்திருத்தலால் பலர்க்கு அவற்றைக் கற்றற்கண் ஊக்கம் உண்டாவதில்லை. நண்பர் பூ. மு. முருகேச முதலியா ரவர்கள் விநாயகபுராணம் கந்தபுராணம் பாகவதம் என்னும் மூன்று பெரும் புராணங்களுட் கூறப்படும் முக்கிய சரிதங்களைச் சுருக்கி முறையே கணபதி குமரன் கோபாலன் என்னும் மூன்று சிறு புத்தகங்களாக எழுதி உபகரித்ததனுல் பாடசாலைச் சிறுவர் சிறுமியரும் பெருநூல்களைக் கற்றற்கு அவகாசமும் ஆற்றலுமில்லாத மற்றையோரும் இத் தெய்வவீரர்களைப்பற்றி எளிதில் அறிந்து கொள்ளற்கு இடமுண்டாயிற்று. அவற்றுள் ஒவ்வொன்றும் அழகிய தமிழ் நடையில் அமைந்திருப்பதோடு பொருத்தமான சித்திரப்படங்களாலும் பொலிவுறுகின்றது.

சென்னை,
30-12-1926

S. அனவரதவிநாயகம் பிள்ளை, M.A., L.T.,
*Formerly Lecturer,*
*University College Colombo.*

# பொருள் அடக்கம்







ஸ்ரீமந் நாராயணமூர்த்தி




‘கன்று மேய்க்கும் கண்ணன் அடியிணை
என்று மேத்தித் தொழுவோம் யாமே’

---

## 1. ஸ்ரீமந் நாராயணமூர்த்தி

எல்லா உலகங்களினும் சிறந்தது ஸ்ரீவை குண்டம்; இதைப் பரமபதம் என்றும் சொல்லு வர். இந்தத் திவ்விய லோகத்தில் செம்பொன் னுற் செய்த கோயிலிலே அழகிய நவரத்தின மண்டபம் ஒன்று உண்டு. அதில் ஆயிரம் தலைகளோடு கூடிய ஆதிசேடன் என்னும் நாக ராஜன் சிங்காதனமாய் அமர்ந்து இருப்பார். அச் சிங்காதனத்தின்மேல் தர்ம பீடத்தில் ஸ்ரீமந் நாராயணமூர்த்தி ஸ்ரீதேவி பூதேவிகளு டன் வீற்றிருப்பர். பெரிய திருவடி என்னும் கருடாழ்வான் திருவடிச்சேவைசெய்வர். சேனை முதலியார் காவல்செய்து ஒருபுறம் நிற்பர்.

சகல கல்யாண குணங்களும் நிறைந்த அச் சர்வேசுவரன் நீலவர்ணம் உடையவராய், சங்கு, சக்கரம், தண்டு, வில், வாள் என்னும் பஞ்சாயுதங்கள் தரித்து இருப்பர். இதுவன்றி, அவர் தேக மெங்கும் திவ்வியாபரணங்கள் பூண்டு, திருமுடியில் ஒளி வீசும் பல ஜீவரத்தினங்கள் இழைத்த கிரீடமும், திருமார்பில் கௌஸ்துப மணியும் குளிர்ந்த திருத்துழாய் மாலையும் அணிந்திருப்பர். அவர் திருமுகம் நீலவானத்தில் பூர்ண சந்திரன் உதயமானதுபோல் புன்சிரிப்போடும் கூடியிருக்கும். அவருடைய திவ்விய தேகத்தின் காந்தியைக் கோடி சூரியப் பிரகாசத்திற்கு ஒருவாறு ஒப்பிட்டுச் சொல்லலாம். அவரைத் தேவர்களும், முனிவர்களும், நித்தியசூரிகளும் சூழ்ந்து, பல தெய்வமலர்கள் கொண்டு அர்ச்சித்துச் சேவித்து நிற்பர்.

இத்தகைய வைபவம் மிகுந்த வைகுந்தத்திற்கு நாதனாய் ஸ்ரீமந் நாராயணமூர்த்தி பாகவதர்களின் பக்திக்குக் கட்டுப்பட்டு அவர்களுக்குக் கருணைபுரிந்து வருவர். இவ் வைகுண்டத்துக்குக் கீழ்ப்பட்டுள்ள பல உலகங்களிலும் வசிக்கும் தேவர், முனிவர், மனிதர் முதலியோர்கள் வேண்டும்போது அனுக்கிரகம் செய்ய அவர் இப் பூவுலகத்தில் அவதரித்து, இயல்பாயுள்ள பெருங் காருண்யத்தாலே பல திருவிளையாடல்கள் செய்வர். நாராயண மூர்த்

திக்குத் திருமால், விஷ்ணு, பரமபதநாதன், பதுமநாபன் முதலான பல பெயர்கள் உண்டு.

திருமால் உலகசிருஷ்டி செய்ய நினைத்து, தமது திருநாபியினின்று பிரமனைப் படைத்தார். பிரமதேவர், முதலில் தேவலோகம் பூலோகம் பாதாளலோகம் முதலிய உலகங்களைப் படைத்து, இவைகளில் தாவரம், நீர்வாழ்வன, ஊர்வன, பறப்பன, நடப்பன, தேவர், மனிதர் முதலியவர்களையும் படைத்தனர். தேவர்களைப் படைக்கும்போது அசுரர்களும் தோன்றினர். சிருஷ்டியின் பெருக்காலும் அசுரர்களின் துஷ்டச் செயல்களாலும் இவ் வுலகங்களில் பாவம் அதிகப்பட்டது. அதனல் தேவர்களும் முனிவர்களும் தங்களுக்கேற்பட்ட துன்பங்களை நீக்கிக்கொள்ளப் பரமபதநாதனை நாடினர். அவர் பக்தர்களின் வேண்டுகோளுக்கு இரங்கித் திரு அவதாரம் செய்து பாவத்திற்குக் காரணமாயிருக்கும் அத் துஷ்டர்களைத் தண்டித்தனர். அப்படி அவர் செய்த அவதாரங்கள் அநேகம். அவற்றுள் முக்கியமானவை பத்து.



## 2. பத்துத் திரு அவதாரங்கள்

1. மச்சாவதாரம் — சோமுகாசுரன் சத்திய லோகம் சென்று பிரமதேவரிட மிருந்த வேதங்களைத் திருடிக்கொண்டு சமுத்திரத்தில் ஒளித்தான். பிரமதேவர் விரும்பியபடி திருமால் மீன் உருக் கொண்டு கடலிற் புகுந்து அசுரனைத் தேடிப் பிடித்துத் தண்டித்து, வேதங்களைக் குழந்தைகள் உருவாகக் கொண்டு வந்து பிரமனுக்குக் கொடுத்தனர்.



2. கூர்மாவதாரம் — தேவர்கள் பரமபத நாதனை வேண்டிச் சாகாதிருக்க அமிர்தம் கேட்டனர். அவர் கட்டளையின்படி தேவர்கள் பாற்கடலில் மந்தர மலையை மத்தாக வைத்து, ஆதிசேடனைக் கயிறாக அமைத்துக் கடையும்போது, அம் மலை ஆழ்ந்து அசையாது நிற்குமாறு, அவர் ஆமையாக உருவெடுத்துத் தம் முதுகில் தாங்கினர். பாற்கடலைக் கடைந்ததனால் உண்டான அமிர்தத்தைத் திருமால் தேவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தார்.



3. வராஹாவதாரம் — இரணியாக்ஷன் பூமியை ஒரு பாயாகச் சுருட்டிக் கொண்டுபோய்க் கடலில் ஒளித்தான். அவனைத் திருமால் ஒரு பன்றி உருக்கொண்டு போய்க் கொன்று, பூமியைத் தமது கொம்பில் தாங்கி வந்து முன் போல நிலைநிறுத்தினார்.



4. நரசிங்காவதாரம் — பிரகலாதனுக்கு அருள் செய்யத் திருமால் மனித வுடலும் சிங்க முக முங் கூடிய நரசிங்கமாய் ஒரு தூணில் தோன்றி, தேவர்களையும் முனிவர்களையும் வருத்திவந்த இரணியனைத் தொலைத்தார்.



5. வாமனவதாரம்—காசிபருக்கு ஒரு குட்டைக் குமாரராய் அவதரித்துத் திருமால் மகாபலியிடம் மூன்றடி மண் யாசித்தனர். அவன் அதன்படி கொடுக்க, ஆகாயத்தையும் பூமியையும் அவர் தமது இரண்டடிகளால் அளந்து, மூன்றும் அடியை மகாபலியின் சிரத்தில் வைத்து அவனைப் பாதாளத்திற்குப் போக்கினர்.



6. பரசுராமாவதாரம்—ஜமதக்கினி முனிவர்க்கும் ரேணுகைக்கும் பிள்ளையாக முழுமனித



வுருவோடு திருமால் பிறந்தார். (பரசு கோடாலியைக்) கொண்டு யுத்தம் செய்து வந்ததனுல் இவருக்குப் பரசுராமர் என்று பெயராயிற்று. இவர் தன்னயம் மிகுந்து கர்வித்திருந்த க்ஷத்திரியர்களைத் தண்டித்து, அவர்களது பூமிகளை எல்லாம் காசிப முனிவர்க்குத் தானம் செய்தனர்.

7. ராமாவதாரம் — திருமால் தசரத புத்திரராய் ஸ்ரீராமர் என்னும் பெயரோடு அவதரித்தனர். அவர் பிதுர்வாக்கிய பரிபாலனஞ் செய்யத் தமது மனைவி சீதையுடனும் சகோதரர் லக்ஷ்மணருடனும் கானகம் சென்றனர். அங்குச் சீதையை இராவணன் சிறைகொள்ள அவர் லங்கையை அழித்து இராவண கும்பகர்ணுதியரை வதைத்து, சீதையைச் சிறைமீட்டனர். அவர் அயோத்



திக்கு வந்ததும் பட்டாபிராமனுய் மகுடம் சூடித் தேவர், மனிதர் முதலிய யாவரும் இன்பம் எய்தப் பல வருடங்கள் அரசாண்டனர்.

8. பலராமாவதாரம் — பலராமர் வசுதேவருக்கும் ரோகிணிக்கும் குமாரராய் அவதரித்தவர். அவர் கையில் கலப்பையை ஏந்தி இருந்தனர்; ஸ்ரீகிருஷ்ண மூர்த்திக்குத் தமைபனுகி அவரோடு இணைபிரியா திருந்தனர். ருக்மிணியின் திருமணக் காலத்தில் இவர் தம்முடன் சொக்கட்டாணுடித் தோற்றும் ஜெயித்தேனெனப் பரிகாசம்செய்த ருக்மி என்பவனைத் தமது கலப்பையால் அடித்தனர். இவரை ஆதிசேடனது அவதாரமென்றும் சொல்வர்.



9. கிருஷ்ணவதாரம் — ஸ்ரீமந் நாராயண மூர்த்தி தம் பூர்ணும்சத்துடன் வசுதேவருக்கும் தேவகிக்கும் குமாரராய் ஸ்ரீகிருஷ்ணனுக அவதரித்தனர். இவர் கோகுலம் சென்று யசோதையின் மகனுய் வளர்ந்தனர். இவர் தமது இளம் பிராயத்தில் பல அசுரர்களை அனுயாசமாய்ப் பால லீலைகளினுலே அடக்கினர். பெற்ருேரைச் சிறை செய்த கம்சனைக் கடிந்தனர். இவர் கோபிகைகளுடன் பல திருவிளையாடல்கள் செய்து கோபாலர்களையும் குந்தி புத்திரர்களாகிய பாண்டவர்களையும் காத்தனர்.



**10.** கல்கி அவதாரம் — கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆக யுகங்கள் நான்கு. கலியுகம் கடைசியானது. இதில் புண்ணியம் குறைந்து பாவம் அதிகமாகும். இதில் நல்லவர்கள் தியவர்களாவார்கள். நல்லோர்களின் குணத்தைத் தியோர் அறிய முடியாமற் போகும். எல்லாரும் சுவய நலம் பாராட்டுவர். கடவுளைக் கவுரவத்திற்காக ஆராதிப்பர் இப்படிப்பட்ட தீமைகளெல்லாம் இந்த யுகத்தில் நடைபெறும். இவைகளை நீக்கி எல்லாருக்கும் நல்ல புத்தியைப் புகட்டிச் சகோதர பாவம் உண்டாக்க விஷ்ணுயட்சர் என்பவருக்கும் சுசிலைக்கும் குமாரராய்ப் பகவான் கல்கி அவதாரம் செய்வர். அவர் தேவர்களால் கொடுக்கப்படும் குதிரையின்மீது ஏறிக்கொண்டு பாவம் அதிகப்பட்ட இடங்களுக்குச் சென்று பாவங்களை நீக்கித் தர்மத்தை நிலைநாட்டுவர்.





## 3. பூமிதேவியின் முறை

துவாபர யுகத்தின் கடைசியில் அசுரர்கள் அரசர்களாய்ப் பிறந்து நமது தேசத்தின் பல பாகங்களை ஆங்காங்கு ஆண்டுவந்தனர். அவர்கள் மகா கர்வத்தை அடைந்து அநேக பாவச் செயல்களைச் செய்துவந்தனர். அதனால் பூமிதேவி பாவமாகிற பாரத்தைத் தாங்கமாட்டாமல் பசுருபந் தரித்துப் பிரமலோகஞ் சென்று நான்முகனிடம் முறையிட்டனள். இதைக் கேட்ட பிரமதேவர் பூமிதேவியையும் தேவர் முனிவர்களையும் அழைத்துக்கொண்டு திருப்பாற்கடலை அடைந்தனர்; அங்கு ஆதிசேடன்மீது பள்ளிகொண்டிருந்த பரந்தாமனைக் கண்டு தோத்திரம் செய்து கைகூப்பி வணங்கி, வந்த காரியத்தைத் தெரிவித்தனர்.

அப்போது பகவான், 'பூபார நிவிர்த்திக்காகப் பூலோகத்தில் யாம் வசுதேவருடைய கிருகத்தில் அவதரிக்கப் போகின்றோம்; தேவர்களாகிய நீங்கள் யாவரும் யாதவவம்சத்திற் பிறந்திருக்கக் கடவீர்கள்; அப்போது யாம் துஷ்டர்களைத் தண்டித்துச் சிஷ்டர்களைப் பரிபாலிப்போம்; அஞ்சாதிர்கள்' என்று தேவர்களுக்குச் சொல்லி, பூமிதேவியையும் இனிய சொற்களால் தேற்றி அனுப்பினர். பின்னர், தேவர்கள் முதலியோர் அவரவர் உலகம் சென்றனர்.

## 4. தேவகியின் திருமணமும் புத்திரப்பேறும்

நமது வட இந்தியாவில் டில்லிமா நகரத்திற்குத் தெற்கே யமுனை (ஜம்னு) என்னும் ஒரு திவ்விய நதி பாய்கின்றது. அந் நதிக்கரையில் புண்ய நகரங்களில் ஒன்ருகிய மதுரை என்னும் பட்டணம் ஒன்று உண்டு. தென் இந்தியாவில் பாண்டியர்கள் ஆண்ட தென்மதுரை இருப்பதால், இதை வடமதுரை என்பர். இதற்கு இப்போது மத்ரா என்று பெயர். இது போஜவம்சத்து அரசர்களுக்கு இராஜதானியாயிருந்தது. உக்கிரசேன மகாராசன் இம் மதுரா பட்டணத்தை ஆண்டு வந்தனன். அவனுடைய புதல்வன் கம்சன். உக்கிரசேன ராசனுக்குத் தேவக ராசன் என்ற ஒரு சகோதரன் உண்டு. அந்தத் தேவக ராசனுடைய புத்திரி தேவகி. அந்த ராச கன்னிகையை உக்கிரசேனன் யதுவம்சத்து அரசர்களில் ஒருவரான சூரராசன் புத்திரரும் கம்சனுக்குத் தோழரும் ஆகிய வசுதேவருக்குத் திருமணம் செய்துவைத்தனன்.

மணம் முடிந்ததும் வசுதேவர் தேவகியை அழைத்துக்கொண்டு தமது கிருகம் செல்ல இரதத்தின்மீது ஏறினர். அப்போது கம்சன் தனது தங்கை தேவகியையும் வசுதேவரையும் மணக் கோலத்துடன் கண்டு சந்தோஷித்து

அவர்கள் வீற்றிருந்த தேரின்மீது ஏறிச் சாரத்தியம் செய்ய அமர்ந்தான். தேர் புறப்படும்போது அநேக மங்கள வாத்தியங்கள் முழங்கின. கம்சன் தேரைச் சிறிது தூரம் நடத்தியதும் ஆகாசவாணி அவனைக் கூப்பிட்டு, 'ஏ கம்சா, இப்போது நீ, அழைத்துச் செல்லுகின்ற தேவகியின் எட்டாம் கர்ப்பத்தில் ஒரு மகா புருஷன் தோன்றி உன்னைக் கொல்லப் போகின்றான்' என்று சொல்லிற்று. அசரீரியின் வார்த்தையைக் கேட்டதும் மூர்க்கனும் பாவியுமான அந்தக் கம்சன் கோபமூண்டான். உடனே அவன் தனது உடைவாளைக் கையிலேந்திப் பெண்ணென்றும் பாராமல் அத் தேவகியைக் கொல்ல அவ் வம்மையின் கூந்தலைப் பற்றி இழுத்தான்.

அப்போது தேவகியின் மணாளரான வசுதேவர் எழுந்து கம்சன் கையைப் பிடித்துக்கொண்டு, இதவார்த்தைகள் பல சொல்லினர். 'இந்தத் தேவகி உனக்குத் தங்கை; இளம்பிராயமுடையவள்; உன்னைத் தவிர வேறு கதி இல்லாதவள்; அவளைக் கொல்லுவதனால் மகா கொடிய நரகத்தை அடைவாய். ஆகாசவாணி இவளுடைய பிள்ளையால்தான் உனக்குப் பயம் என்று சொல்லிற்று; ஆகையால், இவளால் உனக்குப் பயமில்லை. இவளிடத்தில் பிறக்கும் எட்டாம் பிள்ளையன்றோ உனக்குச்

சத்துருவாகப் போகின்றான்? நான் அந்த எட்டாம் பிள்ளையைக் கொடுத்து விடுகிறேன். இதர பிள்ளைகளாலும் உனக்குக் கெடுதி நேரிடும் என்று நீ நினைத்தால் அவர்களையும் உன்வசம் நான் ஒப்பிக்கின்றேன். அவர்களை உன் இஷ்டப் பிரகாரம் செய்துகொள். ஆனால் இந்தப் பெண்ணை மாத்திரம் கொலை செய்யாதே' என்று கல்லும் கரையும்படி விநயமாய்ச் சொல்லினர். கம்சன் அதனால் மனம்தேறித் தங்கையைக் கொலை செய்யாது விடுத்தான். வசுதேவரும் தேவகியும் தங்களை ஆபத்தினின்றும் தப்ப வைத்ததற்காக ஸ்ரீமந் நாராயணனை வாயார வாழ்த்தித் தமது மாளிகைக்குச் சென்றனர்.

தேவகியும் வசுதேவரும் மலரும் மணமும்போல வாழ்ந்து வருகையில், தெய்வ அனுக்கிரகத்தால் தேவகி கர்ப்பவதியாகிப் பத்து மாதம் சென்றதும் ஓர் ஆண்குழந்தையைப் பெற்றனள். குழந்தை பிறந்ததும் வசுதேவர் கம்சனுக்கு வாக்களித்தபடி அக் குழந்தையை அவனிடத்திற் கொண்டுபோய்க் கொடுத்தார். வசுதேவர் சத்தியம் தவறாதவராகையால் சொன்னபடி செய்தனர். கம்சன் வசுதேவரது குணத்தைக் கண்டு மகிழ்ந்தான்; 'இச் சிசுவால் எனக்கு ஆபத்து ஒன்றுமில்லை; எட்டாம் சிசுவால்தான் பயம் என்று ஆகாச வாணி சொல்லிற்று; ஆகையால், நீர் இதைச்

சுகமாக எடுத்துக்கொண்டு போம்' என்று சொன்னான். அவன் கட்டளையிட்டபடியே அவர் அக் குழந்தையைத் திரும்ப எடுத்துக்கொண்டு தமது மாளிகை அடைந்தனர்.

மூவுலகத்திலும் எப்போதும் தேவகாரியமாகச் சுற்றித் திரிபவர் நாரதர். அவர் எப்போதும் தமது வீணையை மீட்டிக்கொண்டே பகவானுடைய கல்யாண குணங்களைப் பாடிக்கொண்டிருப்பர். அம் முனிவர் ஒருநாள் பூலோகத்திற்கு வந்து மதுரா பட்டணத்தை அடைந்து கம்சனைக் கண்டார்; அவன், குழந்தையைத் திரும்பி எடுத்துக்கொண்டு போகச்சொன்னதைக் கேள்வியுற்றார்; கம்சன் அப்படிச் செய்தது தேவகாரிய விரோதம் என்று நினைத்தார்; உடனே கம்சனை மாளிகையின் ஒருபுறத்திற்கு அழைத்துச் சென்று, 'ஏ கம்சா, யதுவம்சத்தில் இப்போது தோன்றியுள்ள வசுதேவர் தேவகி முதலியவர்கள் தேவர்கள்; ஆயர்பாடியில் உள்ள கோபாலரும் கோபிகைகளும் அவர்கட்குத் தலைவனாகிய நந்தகோபன் முதலிய யாவர்களும் தேவர்களே; உனது தாயாதிகளும் தோழர்களும் மற்றும் உன்னைச் சேர்ந்தவர்களுந்தாம் அசுரர்கள். பூமிக்குப் பாரமாயுள்ள அசுரக் கூட்டங்களாகிய உங்களையெல்லாம் ஒழிக்கவே தேவர்கள் இப்போது பூமியில் பிறந்திருக்கிறார்கள்; ஆதலால், தேவகி தேவியின் வயிற்றில் பிறக்கும்

எல்லாக் குழந்தைகளிடத்திலும் ஜாக்கிரதை யாய் இரு' என்று சொல்லி மறைந்தனர்.

இதைக் கேட்டதும் கம்சனுக்குக் கோபம் அதிகப்பட்டது; கண்கள் சிவந்தன. உடனே அவன் தேவகியின் வீட்டை யணுகி, எடுத்துச் செல்லும்படி உத்தரவிட்ட சிசுவை அவள் கையிலிருந்து பிடுங்கி வாளுக்கு இரையாக்கினான்; அதனோடு கோபம் தணியாமல் வசுதேவரையும் தேவகியையும் கால்களில் விலங்கிட்டுத் தன் அரண்மனைக்கு அழைத்துச் சென்றான்; அங்கே யுள்ள சிறைக்கூடத்தில் வைத்து, அவர்கள் வெளியிற் செல்லாதபடி தக்க காவலையும் அமைத்தான்; தனக்குக் கப்பம் கட்டி வரும் கோகுலத்துத் தலைவன் நந்தகோபனுக்கு வரியை அதிகப்படுத்தினான்; கோபாலர்களையும் பலவகைகளில் துன்பப்படுத்தினான். சிலர் இவன் கொடுமைக்குப் பயந்து வேறு ராஜ்யங்களை அடைந்தனர்.

சிறையிலிருந்த தேவகிதேவிக்குப் பகவான் திருவருளால் எழு குழந்தைகள் பிறந்தன. அவைகளை எல்லாம் கொடும்பாவியாகிய கம்சன் ஒன்றன்பின் ஒன்றாய்க் கொன்று ஒழித்தான். முற்பிறப்பில் இக் கம்சன், தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் கொடிய துன்பங்கள் செய்த காலநேமி என்னும் அசுரனுதலால்தான்

அவன் நெஞ்சம் கல்லினும் வலியதாயிற்று. அப் பாவி, நாரதமுனிவர் சொல்லிய விஷயங்களைக் கேட்டதுமுதல் ஆயர்பாடியில் உள்ள யாதவர்களைச் செய்த இம்சை சொல்லி முடியாது. அதுவே யன்றித் தனது பிதாவான உக்கிரசேன மகாராசனை அவன் சிறையிலடைத்துத் தானே ராஜாதிராஜனைப் பட்டங் கட்டிக் கொண்டு அரசாண்டான்.



## 5. பலராமர் ஜனனம்

வசுதேவருக்கு ரோகிணி என்னும் மற்றொரு மனைவியும் உண்டு. இவருக்கு ரோகிணியிடம் பிறந்தவர் பலராமர். இவர் திருவனந்தாழ்வான் அம்சமாகவும், ஸ்ரீமந் நாராயணனது வெண்ணிற அம்சமாகவும் அவதரித்தவர். இவர் ஒரே குண்டலத்தை உடையவர். இவர் ஆயுதம் கலப்பை. இவருக்கு யமுனை இரண்டு நீல வஸ்திரங்களும், ஒரு பொன் மாலையும் அளித்தனள். அவைகளைத் தம் அழகிய திருமேனியில் தரித்து, இவர் நீலாம்பரன் எனப் புகழ் பெற்ருர். கோகுலத்தின் தலைவனுன நந்தகோபனுல் போஷிக்கப்பட்டு இவர் ஆயர் பாடியில் வளர்ந்து வந்தார்.

அக் காலத்தில் நந்தகோபரும் அவர் மனைவி யசோதையும் புத்திரப்பேறு வேண்டிக் கடவுளைப் பிரார்த்தித்தனர். ஸ்ரீமந் நாராயணன் அதை உணர்ந்து மாயாதேவியை அழைத்தனர்; அவள் வந்ததும், 'நீ போய் யசோதையின் கர்ப்பத்தில் இரு; யாம் தேவகியின் கர்ப்பத்தில் உதிப்போம்; எம்முடைய கட்டளைப் படி வசுதேவர், தேவகியின் சிசுவாகிய எம்மை யசோதையிடம் வைத்து, உன்னைத் தேவகியின் சிசுவாக மாற்றி வைப்பர்; அப்போது உன்னைக் கம்சன் கொல்ல வருவான்; நீ காளியாக மாறி உண்மையை உரைத்து, "உன்னைக்கொல்வோன் வேறே எங்கேயோ ஓரிடத்தில் பிறந்திருக்கின்ருன், என்னை ஏன் இம்சிக்கிருய்" என்று சொல்லி மறைந்து செல்வாய்' என்று கட்டளையிட்டனர்.

பின்னர்த் திருமால் தாம் முன் வாக்களித்தபடி தேவகியின் திருவயிற்றில் அவதரித்து, துஷ்டர்களைத் தண்டித்துச் சிஷ்டர்களைப் பரிபாலித்துத் தர்மத்தை நிலைநிறுத்தி யருளினர். அவ் வைபவங்களைப் பின்வரும் பக்கங்களில் விவரமாய்க் காணலாம்.



## 6. கோபாலன் திரு அவதாரம்

சர்வ மங்கள மூர்த்தியாகிய ஸ்ரீமந் நாராயணன் கோபாலனுய்த் தேவகியின் திரு வயிற்றினின்றும் அவதரித்த தினம் ஆவணியில் ரோகிணி நாளாகும். அது நாட்களுக்கெல்லாம் மேலான நாள்; ஆகையால், அதை நாம் அவருடைய ஜயந்தியாகக் கொண்டாடுகின்றோம். அவர் உதித்த திதி அஷ்டமியாதலால், அது கோகுலாஷ்டமி என்றும் வழங்கப் படுகிறது. பகவான் அவதரித்த தினத்தில் வானம் நிர்மலமாய் விளங்கிற்று. நட்சத்திரங்கள் எல்லாம் வச்சிர வைடூரியங்களைப்போலப் பளபளப்பாய்ப் பிரகாசித்தன. குளம், குட்டை, ஏரி, ஆறு முதலியவைகள் ஜலம் பொங்கித் ததும்பி நிறையப் பெற்றன. ஆகாயத்தில் கந்தர்வர் பாடினர். தேவர்கள் பூமாரி பொழிந்தனர். அரம்பையர் ஆடினர். நாரத கிம்புருடர் யாழ் வாசித்தனர். தேவர்கள் எல்லாரும் அடங்காத ஆனந்தமடைந்து, கோபாலனைக் கைகூப்பித் துதித்தனர்.

கோபாலன் பிறந்ததும், நான்கு திருக்கரங்களுடன் சங்கு, சக்கரம், கதை, கமலம் ஆகிய இவைகளைத் தரித்து, திருமார்பில் ஸ்ரீவத்சம் என்னும் மறுவும், திருக்கழுத்தில் கௌஸ்துப மணியும் திருத்துளப மாலையும், முடியில் நவ



கோபாலன் திரு அவதாரம்

ரத்தின கிரீடமும், காதில் குண்டலங்களும் மின்ன, திவ்விய பீதாம்பரம் உடுத்துக் கோடி சூரியப் பிரகாசனுய்த் தேவகியின் மடியிலிருந்து காட்சி கொடுத்தனன். இதைத் தேவகியும் வசு தேவரும் கண்ணாரக் கண்டு துக்கமெல்லாம் விண்டவர்களாய், அன்றே சிறையினின்றும் விடுபட்டவர்கள் போலப் பரமபதநாதனைப் பார்க்குந்தோறும் பரமானந்தம் அடைந்து, பாசுரங்கள் பலப்பல பாடிப் புகழ்ந்தனர்.

அப்போது பகவான் பூர்வகாலத்தில் வசு தேவர் காசிபமுனிவர் என்றும், தேவகி அதிதி என்றும், அவர்கள் செய்த தவப்பயனுல் அவர் கள் ஜன்மம் எடுக்குந்தோறும் தாம் அவர்களுக் குப் புத்திரராகப் பிறந்து வருவரென்றும் கூறி னர்; இதுவன்றி உடனே தம்மைக் கோகுலத் தில் உள்ள ஆயர்பாடிக்கு எடுத்துச் சென்று யசோதையிடத்தில் விட்டு, அங்கிருக்கும் பெண் சிசுவை இங்குக் கொண்டு வந்து வைக்கக் கட்டளையிட்டனர்; தம்மை வசுதேவர் எடுத்துச் செல்லும்போது கதவுகளெல்லாம் தாமாகவே திறக்கும் என்றும் சொல்லித் தம் திவ்வியமங்கள ரூபத்தை மறைத்துக்கொண்டு, சாதாரணமான குழந்தையைப்போல இருந்தனர்.

பரமாத்மாவின் கட்டளையின்படி தேவகி அச் சிசுவை வசுதேவர் கையில் கொடுத்தனள்.

அவர் அதைக் கரத்தினில் ஏந்தி வெளியில் புறப்பட்டார். உடனே காலிலிருந்த விலங்கு விடுபட்டது. கதவுகளெல்லாம் தாமாகவே திறந்தன. வாயில் காப்போர் மயங்கி விழுந்து கிடந்தனர். வசுதேவர் வெளியில் வந்தபொழுது காற்றுடன் மழை பொழிந்தது. அப்போது ஆதிசேடன், 'நிற்கக்குடையாம், இருக்கச் சிங்காதனமாம், கிடக்கப் பாயாம்' என்கிறபடி எம்பெருமானுக்குக் குடையாக இருந்து மழை





யினின்றும் காத்ததோடு, தன் சிரோமாணிக்கத்தால் பிரகாச முண்டாக்கி, வசுதேவருக்குக் காரிருளில் வழிகாட்டிச் சென்றனன்.

வழியில் யமுனுநதி அதிகமாகப் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருந்தது. வசுதேவரைக் கண்டதும் அந் நதி வடிந்து வழிவிட்டது. பகவானை எடுத்துச் சென்ற வசுதேவர் சுகமாக அக் கரை சேர்ந்து ஆயர்பாடியில் உள்ள நந்தகோபர் வீட்டை அடைந்தனர். மாயவன் அருளால் மயங்கி யிருந்த யசோதையி னிடத்தில் வசுதேவர் தாம் எடுத்துச் சென்ற தெய்வக் குழந்தையை விடுத்து, ஆங்குப் பிறந்திருந்த பெண் சிசுவைத் தம் கையில் எடுத்துக்கொண்டு சிரமமின்றிச் சிறைக்கூடத்திற்குள் பழையபடி வந்து சேர்ந்தார். சேர்ந்ததும், முன்போலக் கதவுகள் மூடிக்கொண்டன. வசுதேவர் காலில் விலங்கும் தானுகக் கவிந்துகொண்டது.

யசோதை தான் பெற்ற பிள்ளை ஆணென்றும் பெண்ணென்றும் அறியவில்லை. அவள் மயக்கமாகப் படுத்திருந்தாள். அவள் வீட்டில் இருந்தவர்களுக்கும் சிசுக்கள் மாற்றப்பட்டது தெரியாமற் போயிற்று. எல்லாம் கடவுள் செயல்.



## 7. பெண் குழந்தை காளியாதல்

வசுதேவர் சிறைக் கூடத்திற்குள் வந்து தேவகியின் பக்கத்தில் பெண் சிசுவை வைத்ததும் குழந்தை அழ ஆரம்பித்தது. குழந்தை அழுஞ் சத்தத்தைக் கேட்ட காவலாளர் ஓடோடிச் சென்று கம்சனுக்குத் தெரிவித்தனர். இதனைக் கேட்ட கம்சன் மனம் பகீரென்று எரிந்தது. அவன் படுக்கையை விட்டுத் திடுக்கென எழுந்து, கால்கள் தடுமாறத் தரையில் விழுந்தான்; மறுபடியும் தேறி நின்றான்; தலைவிரி கோலமாய் இங்குமங்கும் ஓடினான்; கடைசியில் சிறைச்சாலையை அடைந்து ஒருவரையும் கேளாமலே தேவகியின் பக்கத்திலிருந்த குழந்தையைக் கால்களைப் பிடித்துத் தூக்கினான். அப்போது தேவகி கண்களில் நீர் பெருக ஈனசுரத்துடன் கம்சனைப் பார்த்து, 'அண்ணா, இக்குழந்தை ஆணன்று, பெண்; உனக்கு மருமகள் ஆவள்; இதைக் கொல்லாதே; அழகிற் சிறந்த எனது அருமைப் புதல்வர்கள் எழுவரைக் கொன்றுவிட்டனை; இந்தப் பெண் பிள்ளையாவது நீ எனக்குக் கொடுத்த பிச்சையா யிருக்கட்டும்' என்று கெஞ்சிக் கேட்டனள்.

இவைகளை யெல்லாம் கம்சன் காதில் கேளாதவனேபோல் குழந்தையின் கால்களைப் பிடித்துக்கொண்டு தலைகிழாய்த்தொங்கச் சிறைச்

சாலையின் வெளியில் உள்ள கற்பாறை யண்டை ஓடினான். குழந்தையை அப் பாதகன் பாறையின் மீது ஓங்கி மோதினான். அப்போது அந்தக் குழந்தை அவன் கரத்தினின்றும் நழுவி ஆகாயத்



திற் கிளம்பிற்று. அங்கே அது தன் உருவத்தை மாற்றிக்கொண்டு எட்டுக் கரங்களுடன்

வில், அம்பு, சூலம், கயிறு, சங்கு, சக்கரம், தடி, கத்தி ஆகிய ஆயுதங்களைத் தரித்து, அழகிய திவ்வியாபரணங்களுடன் காளியாகத் தோன்றிற்று. அந்தக் காளி கம்சனைப் பார்த்து, 'ஏ மூடா, உன்னைக் கொல்லுவோன் வேறு ஓரிடத்தில் பிறந்து வளர்கின்றான்; என்னை என் வீணாக இம்சிக்கிறாய்?' என்று சொல்லி, ஆகாயத்தில் மறைந்துவிட்டனள்.

இக் காட்சியைக் கண்டதும் கம்சன் அதிக ஆச்சரியமும் திகிலும் அடைந்தான். செய்வது இன்னதென்று அறியாது அவன் சில நிமிஷங்கள் திகைத்து நின்றான்; பின்பு மனம்தேறி நேராகத் தேவகியிடம் சென்றான்; தேவகியைக் கண்டு, 'நான் குழந்தைகளைத் தின்னும் ராக்ஷதனைப்போல் உன் ஏழு குழந்தைகளையுங் காரணமின்றிக் கொன்றேன்; என் பிழையைப் பொறுத்துக்கொள்' என்று மிகவும் வருத்தத்துடன் சொல்லி, தன்னை மன்னிக்கும்படி மைத்துனர் வசுதேவரையும் கேட்டுக்கொண்டான். உடனே, கம்சன் அவர்கள் கால்களில் இருந்த விலங்குகளை நீக்கி அவர்கள் இருப்பிடம் போய்ச்சேர விடை கொடுத்து அனுப்பினன். மகா சாதுக்களாகிய வசுதேவரும் தேவகியும் கடவுளையும் கம்சனையும் வாழ்த்தித் தங்கள் மாளிகையை அடைந்தனர்.



## 8. ஆயர்பாடியின் சிறப்பு

வடமதுரைக்கருகே ஆயர்கள் வசித்த நாட்டிற்கு நந்தமண்டலம் என்று பெயர். அந்த நாட்டிற்குக் கோவர்த்தனமலை ஓர் அரணாக இருக்கிறது. இம் மலையை அடுத்து இருக்கும் வனம் பிருந்தாவனம். ஆயர்களது முக்கிய நகரத்தைக் கோகுலம் என்று சொல்லுவர். அந்த நகரத்தைச் சுற்றியும் யமுனாநதி பாய்ந்துகொண்டிருக்கிறது. நந்தமண்டலத்திற்கு அரசனாய் நந்தகோபர் எனபவர் கோகுலத்தில் வாழ்ந்து வந்தனர். கோகுலத்தில் நந்தகோபர் வசித்து வந்த இடத்தை ஆயர்பாடி என்பர்.

அந்தக் கோகுலத்தின் நாற்புறங்களிலும் குளங்களும் சோலைகளும் சூழ்ந்து இருந்தன. இவைகளுக் கப்பால் புற்றரைகள் விஸ்தாரமாய் இருந்தன. அங்கு இல்லந்தோறும் கன்றோடு பசுக்கள் கட்டியிருக்கும். ஆயர்கள் வீட்டு அறைகளில் சிறுவர்களுக்கும் பூனைகளுக்கும் எட்டாதபடி உயரத்தில் கயிற்றினால் செய்த உறிகளைத் தொங்கவிடுவார்கள். அவ் வுறிகளில் அவர்கள் காய்ச்சிய பாலை மட்பாத்திரங்களில் இட்டு, வேறொரு பாத்திரத்தில் கடைந்தெடுத்த வெண்ணெயை வைத்து மூடி வைப்பர்.

இந்த அழகுவாய்ந்த ஆயர்பாடியில் நமது கோபாலன் யசோதைக்குத் திருக் குமாரனாய்

அவதரித்தான் என்று கோபிகைகளும் கோபாலர்களும் தெரிந்து ஆனந்தம் எய்தினர்; தங்கள் வீடுகளைச் சுத்தம் செய்து அலங்கரித்தனர்; தங்களையும் திவ்விய வஸ்திர பூஷணங்களினுல் அலங்கரித்துக் கொண்டு நந்தகோபர் வீட்டை நாடி வந்தனர்.

நந்தகோபர் தமக்குப் பிறந்திருக்கும் குழந்தை திவ்விய மங்கள சொரூபியாய் அதிக தேஜஸோடு விளங்குவதைப் பார்க்குந்தோறும் பரமானந்தம் அடைந்தனர். யசோதை எத்தகைய இன்பமுற்ருள் என்று சொல்லவும் வேண்டுமோ! அன்று மறுநாளே நந்தகோபர் அநேக பசுக்களைத் தானம் செய்தார்; கோபாலச் சிறுவர்களுக்குப் பட்சண பலாதிகளை வழங்கினுர்; தம் உறவினர்க்கும் மற்றையோர்க்கும் நல்விருந்து அளித்தார். சேரியிலுள்ளாரும் தங்களால் இயன்ற பால், தயிர், வெண்ணெய் முதலியவைகளை வழங்கினர். எப்பொழுது திருமாலே அச்சேரியில் திரு அவதாரம் செய்தனரோ அப்பொழுதே லக்ஷ்மியும் சகல பாக்கியங்களுடன் நிறைந்திருப்பாள் அல்லவோ? ஆதலால், அன்றுமுதல் கோகுலத்தில் செல்வம் நீங்காது நிறைந்து, சகல பாக்கியங்களும் பெருகிக் கொண்டே வந்தது.



## 9. கோபாலன் பாலலீலை

ஆயர்பாடியில் நமது கோபாலனும் பலராமனும் சுகமாக வளர்ந்து வந்தனர். இவர்கள் வளர்ந்து வருவதைக் கேள்வியுற்ற கம்சன் நாரதர் சொல்லிய மகாவிஷ்ணுவின் அவதாரமாய் வந்துள்ள ராமகிருஷ்ணர்கள் இவர்களாயிருக்கக் கூடும் என்று யோசித்தான்; இதற்கினி என்ன செய்வோம் என்று மனத்தில் கவலை கொண்டான்; உடனே மந்திராலோசனை சபை கூட்டினன். சபையோர் தங்கள் அபிப்பிராயங்களைத் தெரிவிக்கு முன்னர் இவன் கோபித்துத் தன்னைச் சூழ்ந்துள்ள அரக்கர்களை நோக்கி, 'நீங்கள், எவ்விதத்திலாவது அந்த இரண்டு குழந்தைகளையும் வதைத்து வாருங்கள்' என்று உத்தரவிட்டு அனுப்பினன்.

### 1. பூதனையின் வதம்

கம்சன் உத்தரவிட்டபடியே பூதனை என்னும் ஓர் அரக்கி தன் கோரமான உருவத்தை மறைத்துக் கொண்டு ஓர் அழகுவாய்ந்த தெய்வலோகப் பெண்ணைப்போல் உருவெடுத்துச் சர்வாபரணங்களும் பூண்டு புன்சிரிப்போடு மெல்லென நடந்து நமது கோபாலன் துயில்கின்ற தொட்டிலின் அருகே வந்து சேர்ந்தாள். பாம்பைப் பழுதையென்று நினைத்து எடுப்பது

போல, 'இது சாதாரண சிசு, இதைக் கொன்று விடலாம்' என்று தான் சாவதை அறியாமல் இவ் வரக்கி அக்குழந்தையை எடுத்தாள்; மடியின்மீது வைத்துப் பாலூட்டினுள். அவள் மாயத்தை அறிந்த கோபாலன் அவளைப் பிடித்துப் பாலை உறிஞ்சுவதே போல அவள் பிராணனையும் உறிஞ்சினன். குழந்தை பிடித்த பிடியால் கண்கள் பிதுங்கின; வாய் திறந்தது; கை கால்கள் உதறின; அவ் வரக்கி குழந்தையைப் பார்த்து, 'விடுவிடு, போதும் போதும்' என்று அலறினுள்; கதறிப் பதறினுள். வஞ்சக நெஞ்சமுடையவரையும் வாட்டாது விடுவனே நமது வாசுதேவன்? வல்லரக்கியை உறிஞ்சியபடியே உயிரை நீக்கிவிட்டனன். அவள் உயிர்விட்டதும், பெரிய விருக்ஷம்போலக் கால்களையும் கைகளையும் நீட்டிக்கொண்டு கீழே விழுந்தாள். அந்த அரக்கியின் சரீரத்தின்மீது சிறிதும் பயமின்றி நமது கோபாலனுகிய குழந்தை துள்ளி விளையாடிக்கொண்டிருந்தது.



பூதனை விழுந்த சத்தத்தால் வீட்டிற்குள்ளே இருந்தவர்களெல்லாரும் குழந்தை

இருந்த இடத்திற்கு ஓடிவந்து திகிலும் ஆச்சரியமும் அடைந்தனர். பின்னர், குழந்தை பயந்திருக்கும் என அவர்கள் எண்ணி ரட்சை கட்டித் திருஷ்டி கழித்து யசோதை யிடம் சேர்ப்பித்தனர். ஆயர்களெல்லாரும் பூதனையின் சரீரத்தை அவ்விடத்தினின்றும் நீக்கிக் கொளுத்திவிட்டனர். நமது கோபாலன் பால் உண்ட சரீரமானதால் அவ் வரக்கியின் சரீரத்தைக் கொளுத்தும்போது, அதினின்று வாசனையோடும் அகிற்புகை உண்டாயிற்று.

## 2. சகட பங்கம்

கோபாலன் நாட்கள் சில செல்லத் தவழ்ந்து விளையாடத் தலைப்பட்டான். அதைக் கண்ட யசோதைப்பிராட்டி அதை ஓர் உற்சவமாகக் கொண்டாடஎண்ணுகையில், கோபாலன் பிறந்த ரோகிணி நட்சத்திரமும் கூடிற்று. அன்றைய தினம் யசோதை குழந்தையைத் திருமஞ்சனமாட்டி, சர்வாபரணங்கள் பூட்டி அலங்கரித்தனள்; பக்கலில் உள்ள கோபிகைகளை வரவழைத்துப் பழமும் கற்கண்டும் வழங்கி அந்த உற்சவத்தை மிகவும் சம்பிரமமாக நடத்தினள்; பின்னர், குழந்தையைத் தொட்டிலில் விட்டு வந்தவர்களைத் தக்கபடி உபசரித்தனுப்பினள். அப்போது கம்சனால் ஏவப்பட்ட ஓர் அசுரன்

நந்தகோபாது வீட்டு வண்டி (சகடம்) யின் சக்கரத்தில் ஆவேசித்து உருட்டிக் கொண்டே வந்து தொட்டிலின்மேல் தாக்கிக் குழந்தை யைக் கொல்ல யத்தனித்தான். அதைக் கண்ட மாயவன் சிறிதுபோது கண்ணயர்ந்து பின் பசி யுண்டாகக் கால்களை உதறுவான்போல, வீரிட்டு அலறி அழுது, அத் தொட்டிலின் அருகே வரும் சகடந்தைத் தனது மெல்லிய பாதத் தால் உதைத்தான். அவ்வுதை யைத் தாங்காது அச் சகடம்



அச்சு முறிந்து, ஏர்க்கால் ஒடிந்து, நடுக்கட்டை பிளந்து, உருமாறி விழுந்தது. சகடம் ஒடிந்து விழுந்த சத்தத்தைக் கேட்டு யசோ தையும் கோபிகைகளும் ஓடிவந்து பார்த்து ஆச்சரியப்பட்டார்களே யன்றி, வண்டி ஒடிந்த தின் காரணம் அறியவில்லை. உடனே தோஷம் தீர அவர்கள் குழந்தைக்கு ஆலாத்தி எடுத்து, பஸ்மம் கொண்டு அபிமந்திரித்து, துளசி தீர்த்தம் கொடுத்து ரட்சை பண்ணினர்கள்.

### 3. உறி திருடல்

நாட்கள்பல செல்லக் கோபாலனும், ரோகிணியின் புத்திரனான பலராமனும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக ஆயர் பாடியில் ஆடிப் பாடி வளர்ந்து வந்தனர். ராம கிருஷ்ணர்கள் செய்த பாலலீலைகளின் விநோதங்களைச் சொல்வது எளிதன்று. கண்ணனும் பலராமனும் தமது பாதங்களில் தண்டைகளும் அரையில் சுவர்ண கிண்கிணிகளும் கலகல என்று சப்திக்க, குறு நடை நடந்து இங்கும் அங்கும் ஓடித் தமது பெற்றோர்களைக் களிக்கச் செய்தனர். முளைத்ததும் முளையாததுமாய்ச் சிறிய பற்கள் தோன்றும்படி மிகச் சுந்தரமாய் இவர்கள் சிரிக்கின்ற அழகைக் கண்டு ஆய்ச்சியர்கள் ஆனந்தமுறுவார்கள். இந்தச் சிறுவர்கள் ஓடிச்சென்று கன்றுகளின் வாலைப் பிடித்து இழுப்பார்கள்; அவைகள் வெருண்டு ஓடுகையில் பார்த்துச் சிரிப்பார்கள்.

இவர்களை மேய்ப்பதே யசோதைக்குப் பெரிய தொழிலாக இருந்தது. கோபாலன் சொற்பகாலத்திற் குள்ளேயே நன்றாக நடக்க ஆரம்பித்தான். இவன் இடைப்பிள்ளைகளுடன் கூடி ஒருவர் கண்ணிலும் படாமல் வீடுகளுக் குள்ளே சென்று அங்குள்ள தயிர் பால் முதலிய பொருள்களை உறியினின்றும் கீழே இறக்கி

மிகப் பிரியமாய்ப் புசிப்பான்; பிறர்க்கும் கொடுப்பான்; மிகுந்ததைப் பூனைகளுக்குப் பகிர்ந்து கொடுப்பான்; எட்டாவிட்டால் பிள்ளைகளை ஒருவன் மேல் ஒருவனாய்ச் சுவரைப் பிடித்து நிற்க வைத்து, அவர்கள் மீது தான் ஏறுவான்; அப்படியும் எட்டாவிட்டால் தன் கைக்கோலால் பாற்சட்டியைக் குத்தித் தொளை செய்து அதினின்று வரும்பாலைத் தன்வயிறு நிரம்பக் குடித்துக் கீழே நிற்போரையும் முறையே குடிக்கச் செய்வான். இவைகளைக் கண்டு கோபிகைகள் கோபித்து மத்தால் அடிக்க வருவதும் உண்டு. அப்போது அவர்களை அவன் ஏசிப் பேசி ஒரு சாதுவைப்போல்



வெளியே வந்துவிடுவான். இவற்றையெல்லாம்

கண்ட கோபிகைகள் யசோதையிடம் வந்து கோபாலன் செய்யும் துஷ்டச் செயல்களைச் சொல்லி முறையிட்டனர். அதைக் கேட்ட



யசோதை, 'இவர்கள் சொல்லுவன எல்லாம் உண்மையா யிருக்குமோ' என்று அதிசயித்துச் சிரித்த முகத்தோடு இருந்தாளே யன்றித் தன் குழந்தையைக் கண்டிக்கவில்லை.



## 4. மண் உண்ட மாதவன்

ஒருநாள் பலராமன் வீதியிலிருந்து ஓடி வந்து, 'கோபாலன் மண்ணைத் தின்றான்' என்று யசோதையிடம் ஆத்திரத்துடன் சொன்னான். அதைக்கேட்ட யசோதை கோபாலனது



கையைப் பிடித்துக்கொண்டு அவனைச் சிறிது கண்டித்துக் கண்களால் வெருட்டிப் பார்த்து, 'நீ ஏன் மண்ணைத் தின்றாய்? இப்படியும் செய்யலாமா? உனக்கு நான் பால் கொடுக்கவில்லையா? பக்ஷணங்கள் கொடுக்கவில்லையா?

பழம் கொடுக்கவில்லையா? என் மண்ணைத் தின்ருய்? சொல்' என்ருள். அதற்குக் கபட நாடக ருன கண்ணன் மிகப் பயந்தவனைப்போல் பாசாங்கு செய்து, பல்லையுங் காட்டி, 'அம்மா, நான் மண் தின்னவில்லை. ராமன் பொய் சொல்லுகிருன், என் வாயைத் திறக்கின்றேன், பார்' என்று தனது செம்பவளத் திருவாயைச் சற்றே திறந்தான்.

அதில் யசோதை என்ன கண்டாள்! உலகங்கள் பலவும் கண்டாள். சூரிய சந்திரர்களையும் நட்சத்திர மண்டலத்தையும், இன்னும் உலகிலுள்ள எல்லாப்பொருள்களையும் அவள் அங்கே கண்டாள். அவை மாத்திரமோ, தன்னையும், தன் எதிரில் நிற்கும் செம்பவள வாயனையும், பக்கலில் நிற்கும் பலராமனையும் அவள் கண்டாள், ஆச்சரியமடைந்தாள், மயங்கி நின்ருள். 'இது என்ன மாயையோ!' என்று அவள் நினைத்திருக்கும்போதே மாயவன் தனது மாயையினுல் எல்லாவற்றையும் யசோதை மறக்கச்செய்து, வெறு வாயுடன் எதிரில் நின்ருன். அவனை யெடுத்து மடியில் வைத்து யசோதை கொஞ்சி விளையாடினுள். பெற்ற தாய் தந்தையரான தேவகியும் வசுதேவரும் கண்டு அநுபவிக்காத பல பாலலீலைகளை யசோதை பிராட்டி கண்ணுரக் கண்டு மகிழும் பாக்கியத்தைப் பெற்ருள். அவளே பாக்கியசாலி.

## 5. கோபாலனை உரலிற் கட்டல்

ஒருநாள் யசோதை கோபிகைகளது முறையீடுகளைக் கேட்க முடியாமல், 'இவனை என்ன செய்வது' என்று யோசித்து, கையில் கோலுடன் கோபாலனைத் தேடிப் போனாள். அப்போது கோபாலன் பக்கத்து வீட்டில் கவிழ்த்திருந்த உரலின்மீது நின்றுகொண்டு யாராவது கவனிக்கின்றார்களோ என்று திரும்பித்திரும்பிப் பார்த்துக்கொண்டே வெண்ணெயை உண்டுகொண்டும், பூனைகளுக்கு வேண்டியமட்டும் வாரி வாரி இறைத்துக்கொண்டும் இருந்தான்.

மெல்லச் சென்ற யசோதை இதைப் பார்த்துப் பின்புறமாகப் போய் அவனைப் பிடிக்க வந்தாள். இதைக்கண்டு கோபாலன் உரலினின்றும் குதித்து வேகமாய் ஓடினான். யசோதை ஓடோடிப் பின்சென்றும் பிடிக்க முடியாததால் சோர்ந்து நின்றாள். கோபாலனும் ஓடமாட்டாதவன்போல நின்று, அவள் தன்னைப் பிடித்துக் கொள்ளும்படி செய்தனன். அப்போது அவன் தான் மிகவும் பயந்தவன்போலக் கண்களை அரக்கிக்கொண்டு முகமெல்லாம் மைக்கறை படிய அழ ஆரம்பித்தான்.

இதைக் கண்ட யசோதை, 'குழந்தை பயந்துவிட்டது' என்று கைக்கோலை எறிந்துவிட்டு, குழந்தையை வாரியெடுத்து அணைத்து

முத்தமிட்டாள். இவன் அங்கும் இங்கும் ஓடுவதனாலும் இவனைத் தேடிப்பிடிக்கத் தன்னால் முடியாததனாலும், கோபிகைகள் சொல்லும் கோள்களினாலும் இவனை ஒருபுறம் கட்டிவைத்தல் நலமென்று கருதினாள்; உடனே ஒரு கயிற்றைக் கொண்டுவந்து அங்கிருந்த ஒரு பெரிய உரலில் அவனைக் கட்டி, 'இனி எப்படி ஓடப்போகிறாய், நான் பார்க்கிறேன்' என்று சொல்லிவிட்டு, யசோதை வீட்டு வேலையைக் கவனித்திருந்தாள்.

### 6. நளகூபர மணிக்கிரிவர்கள்

ஒரு காலத்தில் நாரதமுனிவர் குபேரனுடைய புத்திரர்களான நளகூபர மணிக்கிரீவர்கள் செய்த துஷ்ட காரியங்களினால் அவர்களைப் பூலோகத்தில் மருதமரங்களாகத் தோன்றும்படி சபித்தனர். அவர்கள் தாம் செய்த பிழையை உணர்ந்து மன்னிக்கும்படி கேட்டனர். அப்பொழுது நாரதர், 'நீங்கள் ஆயர்பாடியில் யசோதையின் வீட்டுப் புறக்கடையில் மருதமரங்களாய் வளருங்கள்; திருமால் கோபாலனாகத் திரு அவதாரம் செய்யும்போது அவரால் அம்மரங்கள் முறிக்கப்படும்' என்றும், 'அப்போது நீங்கள் சாபம் நீங்கி உங்கள் சுயரூபத்தை அடைவீர்கள்' என்றும் சொல்லினர். அதன்படியே அவர்கள் யசோதையின் வீட்டுப் புறக்கடையில் மருதமரங்களாகத்தோன்றியிருந்தனர்.

ஸ்ரீ கோபாலன் பக்தபராதீனன்; ஆகையால், பக்த சிரோமணியாகிய நாரத முனிவரின் வார்த்தையை மெய்ப்பிக்கக் கருதி, அம் மரங்களின் இடையில் தவழ்ந்து சென்றனன். அப்போது அவரைக் கட்டியிருந்த உரல் அம் மரங்களுக்கு இடையில் சிக்குண்டது. அதனை அறிந்த கோபாலன் தன்னைக் கட்டியிருக்கும் கயிற்றால் அதை முன்னுக்கு இழுத்தனன். இவ்வாறு இழுபட்டுத் தாக்கிய உரல் அம் மரங்களை மளமள





என்று முறித்துக் காயும் பூவுங் கூடிய கிளைகளுடன் கீழே தள்ளிற்று. மரங்கள் முறிந்து விழுந்ததும், அவைகளினின்றும் மகா தேஜஸோடு இரண்டு தேவர்கள் தோன்றிக் கோபாலனைப் பணிந்து தோத்திரஞ் செய்துகொண்டே வெளிவந்தனர். அவர்கள் சிறிது நேரம் வைகுண்டநாதனை வாயாரப் பாடி, தங்களுக்கு நாரத முனிவரால் நேர்ந்த சாபத்தையும், அவருடைய அனுக்கிரகத்தாலேயே ஸ்ரீபாலகோபாலனது சேவை கிடைத்ததையும் சொல்லி விடைபெற்றுச் சென்றனர்.

மருதமரங்கள் திடீரென்று விழுந்தமையால் இடி விழுந்தாற்போன்ற ஓசை எழுந்தது. யசோதை இந்த ஓசையின் காரணம் அறியாதவளாய்த் திடுக்கிட்டுக் குழந்தை இருக்கும் புறக்கடைக்கு ஓடினாள். அவள் பின்னே நந்தகோபரும் வீட்டிலுள்ளாரும் ஓடினர். கயிற்றால் கட்டுண்ட பாலன் சிறிதும் பயந்தில்லனாய், இவர்களைக் கண்டதும் சிரித்துக்கொண்டு இங்குமங்கும் உரலுடன் ஓடினான். அப்போது சில இடைப் பிள்ளைகள், 'இக் கோபாலனால்தான் மரங்கள் முறிக்கப்பட்டன; அவைகளினின்றும் இரண்டு தேவ புருஷர்கள் தோன்றி இவனைத் தொழுது சென்றனர்' என்றார்கள். உடனே நந்தகோபர் யசோதையைக் கடிந்து, குழந்தையைக் கட்டியிருந்த கட்டினின்றும் அவிழ்த்து மார்போடணைத்து முத்தமிட்டு யசோதையிடம் கொடுத்தனர்.



## 10. பிருந்தாவனத்துக்குப் போதல்

கோகுலத்தில் கோபாலன் பிறந்த நாள் முதல் பெரிய ஆபத்துக்கள் ஒன்றன்பின் ஒன்ருக நேரிட்டு வருவதையும், பூதனை பால் கொடுக்க வந்து பங்க மடைந்ததையும், சகடம் தொட்டிற் குழந்தையின் காலுதைபட்டு முறிந்து விழுந்ததையும், மருதமரங்கள் முறியுண்டதை யும் நந்தகோபர் கண்டு, இனித் தாம் அங்கு வசிப்பது தகுதியல்லவென்று நினைத்தார். அவர் தங்கள் இனத்தவருடன் ஆலோசித்தார். எல்லாரும் ஒரே மனத்தினராய்ப் பக்கலில் உள்ள பிருந்தாவனத்திற்குத் தங்கள் தங்கள் குடும்பங் களுடன் சாமான்களையெல்லாம் வண்டிகளில் ஏற்றிக்கொண்டு போய்ச் சேர்ந்தனர்.

பிருந்தாவனம் என்பது ஒரு பெரிய நெருஞ்சிற் காடு. பிருந்தாவனத்தைத் துளசி வனம் என்றும் சொல்வர். அதில் குடி யிருப்ப தற்கு யோக்கியமான புற்றரைகளும், கொடி செடிகளும், ஆங்காங்குச் சிறு குன்றுகளும், நீரோடைகளும் நிறைந்து நின்றன. அப் பிருந்தாவனம் ஆயர்கள் தங்கள் ஆடுமாடுகளை மேய்ப்பதற்கு மிகவும் வசதி யுள்ளதாய் இருந்தது.

நந்தகோபர் பிருந்தாவனத்தில் தாம் வசிக் கத் தக்கதோர் மாளிகையும், அம் மாளிகையைச்

சுற்றிலும் தம் இனத்தார் வசிக்கத்தக்க இல்லங்கள் பலவும் கட்டுவித்தனர். ஆயர்கள் போய்ச் சேர்ந்த சில மாதங்களுக்குள் பிருந்தாவனம் பிரம்மலோகமே போலத் தோன்றிற்று. அதைப் பூலோக வைகுண்டம் என்று சொல்லினும் தகும். அதில் வசித்த ராமகிருஷ்ணர்கள் அநேக பால லீலைகளாலும் தங்கள் மழலைச் சொற்களாலும் அங்குள்ளவர்களை யெல்லாம் சதாகாலமும் ஆனந்தமடையச் செய்தனர். ராமகிருஷ்ணர், கொஞ்சம் வயது சென்றதும், தங்கள் குலத்தொழிலாகிய மாடுமேய்க்கும் தொழிலை மேற்கொண்டனர். இவர்கள் சிறுவர்கள் ஆதலினால் முதலில் நந்தகோபர் இவர்களைக் கன்று மேய்க்கும்படி செய்தனர். கோபாலன் கன்றுகளைப் பிருந்தாவனத்தின் மலைச்சாரல்களுக்கு ஓட்டிக் கொண்டுபோய், மற்றைய இடைப் பிள்ளைகளுடன் சேர்ந்து அநேகவிதமான விளையாடல்கள் செய்வான். காலைமுதல் மாலைவரையில் இங்கும் அங்கும் ஓடித் திரிந்து விளையாடுவதே இவனுக்கு வேலை.



## 11. வற்சாசுரனை வாட்டல்

இந்தப்படி கன்றுகளை மேய்த்து வரும் நாளில் ஒருநாள் கம்சனால் ஏவப்பட்ட வற்சாசுரன் என்பவன் கன்று உருவமெடுத்து, இவர்கள் மேய்க்கும் கன்றுகளின் கூட்டத்தில் புகுந்து, மற்றக் கன்றுகளை எல்லாம் முட்டித் தள்ளி அல்லற்படுத்தினான். அதை அறிந்தகோபாலன்பலராமனுக்கு அறிவித்த பின்னர், அம்மாயக் கன்றின் கால்களைப்பிடித்துக் கிறுகிறு என்று சுழற்றி,



அருகேயிருந்த ஒரு விளாமரத்தின்மீது வீசி எறிந்தான். அவ் வற்சாசுரன் மாயச் சரீரம் நீங்கித் தன் சுயரூபத்துடன் பிராணனை இழந்து கீழே விழுந்தான். விளாமரமும் முறிந்து விழுந்தது.



## 12 பகாசுர பங்கம்

பின்னர் ஒருநாள் கன்றுகளை மேய்த்து வீட்டுக்குத் திரும்பும்பொழுது பலராம கிருஷ்ணர்கள் கன்றுகளை நீரோடைக்கு ஓட்டிக் கொண்டுபோய் நீர் அருந்தச் செய்து, மற்ற இடைப்பிள்ளைகளுடன் தாங்களும் நீர் குடித்து இளைப்பாறிக் கரையில் இருந்தனர். அப்போது கம்சனால் ஏவப்பட்ட பகாசுரன் என்பவன் ஒரு கொக்கின் உருவமெடுத்துக் கோபாலன் அமர்ந்திருக்கும் இடத்தை நாடி, திறந்த வாயுடன் ஓடி வந்தான். அவன் தன் கூரிய



அலகினால் கோபாலனைக் குத்திக் கிழிக்க எத்தனித்து வாயைத் திறந்து அவனுடலைப் பற்றினான். அவன் சூதை யறிந்த கோபாலன் அந்தக் கொக்கின் மேல்வாயையுங் கீழ்வாயையும் தனது கரங்களால் பிடித்துக் கோரைப்புல்லைக் கிழிப்பதுபோலக் கிழித்து எறிந்தான்.



## 13. அகாசுர வதம்

மற்றொருநாள் கோபாலன் தன் தோழர்களுடன் வனபோஜனம் செய்ய நினைத்து, அவரவர்கள் வீட்டிலிருந்து ததியோதனம் முதலிய சித்திரான்னங்களைக் கொண்டுவரச் செய்தனன்; தானும் யசோதையிடம் சொல்லி யதேஷ்டமாக உணவுவகைகளையும் பட்சண பலாதிகளையும் சேகரித்துச் சிக்கங்களில் வைத்துத் தோள்களில் மாட்டிக்கொண்டும், கன்றுகளை ஓட்டிக்கொண்டும், தோழர்களுடன் கும்பலாய்ப் புறப்பட்டு அருகேயுள்ள வனத்திற்குச் சென்றான். சிறுவர்கள் சிறிது நேரம் கன்றுகளை மேயவிட்டுத் தாங்களும் விளையாடியிருந்து உச்சிக்காலம் வந்ததும் அங்கே யிருந்த ஒரு சுனையில் நீராடினர். நீராடிப் பூசை முடித்து, அவர்கள் ராம கிருஷ்ணர்களுடன் ஓர் ஆலமரத்தினடியில் இருந்து தங்கள் தங்கள் கட்டமுதுகளைச் சிக்கத்தினின்றும் எடுத்துச் சிறப்பாக வைத்து, கர்ணாமிருதமாகப் பாடினர். கோபாலன் தான் கொண்டு வந்த பட்சண பலாதிகளைப் பகிர்ந்து இட, அவைகளை அவர்கள் தங்கள் கட்டமுதுடன் சேர்த்து உண்டு களித்தனர்.

பின்னர், பொழுது சாய்ந்ததும் கோபாலச் சிறுவர்கள் வீட்டிற்குப் போகப் புறப்பட்டனர். அவர்கள் இரண்டு குன்றுகளின் இடையே

உள்ள ஒரு வழியாகப் போகும்படி நேர்ந்தது. அவ் வழியில் கம்சனுல் ஏவப்பட்ட அகாசுரன் என்பவன் ஒரு பெரிய மலைப்பாம்பு உருவமெடுத்து வாயைத் திறந்துகொண்டு எதிர் நின்ருன். பாம்பின் மேல்வாய் குன்றின் சிகரத்தை அளாவி யது; கீழ் வாய் பூமி யிற் படிந் திருந்தது. அதன் வி ஷப் பற் கள் கோர மாய்த்தொ ங்கின; க ண்களினி ன்றும் தீப் பொறி பற ந்தது; அ து பெரு மூச்சு விட் டுக்கொண் டுபடுத்துக் கிடந்தது; முன் செ ன்ற கோ பாலர்கள் இதைக் க ண்டு பயந் தார்கள்; வேறு வழியில்லையே என்று திகைத்தார்கள்; கோபாலனைக் கூவி அழைத்தார்கள்.



பலராமனுடன் மெல்லென நடந்து பின்னே வரும் கோபாலன் ஓடிவந்து பார்த்து மாயத்தை அறிந்து, தன் தோழர்களுக்குத் தைரியம் கூறினன்; 'நாம் எல்லோரும் இதன் வாய்க்குட் புகுந்தே வாயைப் பிளந்து அப்பால் செல்லவேண்டும்; வேறு வழியில்லை' என்ருன்.

இதைக்கேட்ட இடைப்பிள்ளைகள் கோபாலனுடைய பராக்கிரமத்தை அறிந்தவர்களாதலால் பயமின்றிக் கன்றுகளுடன் தாங்களும் குகைபோன்ற அப் பாம்பின் வாய்க்குள் புகுந்தார்கள். கோபாலனும் பலராமனும் உடன் சென்றார்கள். கோபாலன் உட்சென்றதும் பாலசரீரத்தை மாற்றிப் பிரமாண்டமான சரீரத்தை எடுத்து அவ் அசுரனுடைய தொண்டையை முட்டி அவன் மூச்சுவிடமாட்டாமற் செய்து அப் பாம்பின் வயிற்றைக் கிழித்தனன். பாம்பின் விஷத்தால் மூர்ச்சையடைந்திருந்த தன் தோழர்களையும் கன்றுகளையும் தேவகி தனயன் தனது அருட்பார்வையால் விஷம் நீக்கி மயக்கந் தெளிவித்து முன்போலத் தானும் பால சரீரத்தை வகித்து வெளியில் வந்தான். பரமாத்மாவினுடைய தேகத்தை ஸ்பரிசித்த விசேஷத்தினால் அவ் அசுரன் தன் பாவமெல்லாம் ஒழிந்து பெருஞ் ஜோதியாய்த் தேவசரீரம் பெற்றுப் பரமபதம் எய்தினன்.



# 14. பரமன் மகிமையைப் பிரமன் அறிதல்

பலராமனும் கோபாலனும் தங்கள் கன்று களைத் தினமும் ஓட்டிச் செல்வதேபோல ஒரு நாள் தோழர்களுடன் கூடிக் கானகஞ் சென்றனர். அன்று அவர்கள் ஓர் ஆற்றின் கரையண்டை உட்கார்ந்து நீர்ப் போக்கைப் பார்த்



துக்கொண்டும் நீரில் உள்ள அற்புதங்களைப் பற்றிப் பேசிக்கொண்டும் இருக்கும்போது, மற்ற இடைப்பிள்ளைகள் கன்றுகளையெல்லாம் ஓட்டிக்கொண்டு இவர்கள் காணாத தூரம் சென்றனர். அப்போது பிரமதேவர் நமது பரமாத்மாவின் மகிமைகளை மறந்தவராய்க் கன்றுகளையும் பிள்ளைகளையும் தமது தெய்வசக்தியால் ஒரு மலைக் குகைக்குள் போகச்செய்து, ராமகிருஷ்ணர்கள் காணாதபடி ஒளித்து வைத்தார்.

ஆற்றங் கரையில் பேசிக்கொண் டிருந்த கோபாலன் திரும்பிப் பார்த்தான்; கன்றுகளை யும் தோழர்களையும் காணோம்; சிறிது கலக்க முற்றான். உடனே பலராமனை அழைத்துக் கொண்டு அங்குமிங்கும் ஓடித் தேடியும் காணாத தால் கோபாலன் தான் தனியே சென்று ஒரு குன்றின் புறத்தேயிருந்து, தன்னுடைய மாயை யினாலே, தன்னுடனிருந்த இடைப்பிள்ளைகள் கன்றுகள் முதலிய எல்லாவற்றின் தோற்றம், தொனி, குணம் முதலியன மாறுபா டில்லாமல் உண்டாக்கி அழைத்துக்கொண்டு பலராமனை அடைந்தனன். 'சர்வம் விஷ்ணுமயம் ஜகத்' என்கிறபடி அவன் எல்லாம் தானாய் விளங் கினன். பொழுது சாய்ந்ததும் எந்தெந்தக் கன்றுகள், எந்தெந்தப் பிள்ளைகள் எவ்வெவ் விடத்திற்குச் செல்ல வேண்டுமோ அவ்வவ் விடத்திற்குச் சென்றார்கள். இப்படிச் செய்யா திருந்தால் ஆயர்களுக்கும் ஆய்ச்சியர்களுக்கும் மிகுந்த வருத்தம் உண்டாயிருக்கு மன்றோ?

பின்னர், கோபாலன் கன்றுகளையும் பிள்ளை களையும் மறைத்து வைத்தது பிரமதேவரு டைய செயலென்று அறிந்தான். வருஷம் ஒன் றாகியும் மெய்க்கன்றுகளையும் தோழர்களையும் கரு தாது கோபாலன் மாயச் சிருஷ்டியுடன் களித்து இருக்கின்றானே, காரணம் அறிய முடியவில் லையே என்று பிரமதேவர் நினைத்தார். உடனே

அவர் பிருந்தாவனத்திற்கு வந்து கன்று மேய்க்கும் கண்ணனையும் சூழ்ந்துள்ள மாயக் கன்றுகளையும் இடைப் பிள்ளைகளையும் கண்டார். எப்படிக் கண்டார்? ஒவ்வொருவரையும் தம்மைப்போல் நான்கு முகங்களோடும் நான்கு கைகளோடும் சிருஷ்டித் தொழில் செய்யும் அநேக பிரமர்களாகக் கண்டார்; கோபாலனைச் சரணமடைந்து போற்றித் தொழுதார்; பரமன் மகிமையை அறியாது தாம் செய்த பிழையைப் பொறுக்கும்படி வேண்டினார். உடனே அவர் தாம் ஒளித்து வைத்திருந்த இடைப் பிள்ளைகளையும் கன்றுகளையும் அழைத்துவர விடை பெற்றுச் சென்றார்.

பிரமதேவர் அழைத்துவரச் சென்ற அக்கணமே மாயவன் தன்னைச் சூழ்ந்து நின்ற மாயப் பசுக்களையும் பிள்ளைகளையும் தன் மாயைக்குள் ஒடுங்கச் செய்தான். பிரமதேவருடன் திரும்பிவரும் உண்மைச் சிறுவர்களையும் கன்றுகளையும் கோபாலன், தனது மாயையால், ஒரு வருஷம் பிரிந்திருந்ததை மறக்கச் செய்து, பிரிந்தபோது இருந்ததுபோலவே அவர்கள் மனத்திற் தோன்றச்செய்து வரவேற்றான். கோபாலன் செய்த மாயைகளெல்லாம் அப்பிரமதேவர் ஒருவருக்குத் தெரியுமேயன்றிப் பிருந்தாவனத்திலுள்ள கோக்களும் கோபாலர்களும் அறியவில்லை. என்னே மாயவன் செயல்!

பின்னர், அவன் ஆனந்தமடைந்தவனாய்ப் புல்லாங்குழல் எடுத்துச் செம்பவள வாயில் வைத்து ஊதிக்கொண்டு பழைய பிள்ளைகளுடனும் கன்றுகளுடனும் பொழுது சாய்ந்த வேளையில் ஊருக்கு வந்து, தோழர்களையும் கன்றுகளையும் அவரவர்கள் வீடு போய்ச் சேர உத்தரவு கொடுத்தனுப்பினான்.



## 15. தேனுகாசுர வதம்

ராம கிருஷ்ணர்கள் வயது பன்னிரண்டானதும் கன்றுகளுடன் மாடுகளையும் மேய்க்கத் தொடங்கினர். ஒரு நாள் மாடு மேய்த்துக் கொண்டு ஒரு வனத்தி லிருக்கையில் இடையர்கள் கோபாலனிடம் வந்து, 'அருகிலுள்ள பனங் காட்டில் நல்ல வாசனையும் இனிப்பும் உள்ள பனம்பழங்கள் திரளா யிருக்கின்றன. ஆனல், அவை மற்றவர்களுக்கு உபயோகப் படாதபடி தேனுகன் என்ற ஓர் அசுரன் கழுதை யுருவந் தரித்துத் தன் உறவினருடன் இருந்து மற்றையோரை அங்கே வரவொட்டாமல் உதைத்துத் துரத்தி விடுகின்றான்' என்று தெரிவித்தனர். மேலும், அக்காட்டிலுள்ள பனம்பழத்தினிடத்தில் தங்களுக்குப் பிரியம் அதிகமா யிருப்பதனல் அவைகளைப் பறித்துத் தின்ன உதவி செய்யும்படி அவர்கள் ராம கிருஷ்ணர்களை அழைத்தார்கள். அந்தப்படியே கோபாலன் பலராமனுடன் அக் காட்டிற்குச் சென்றான்.

பலராமன் பனைமரங்களை அசைத்துப் பழங்கள் கீழே உதிரும்படி செய்தான். இதையறிந்த கழுதை வடிவங்கொண்ட அரக்கன் ஓடிவந்து பலராமனை உதைத்து இரைச்சலிட்டு ஓடி, மறுபடியும் வந்து பின்கால்களைக் கோபத்தோடு பலராமனுக்கு நேரே உதறி நீட்டினன். உடனே

பலராமன் அக் கழுதையின் பின் கால்களைக் கரங்களால் பற்றிக் கரகரவெனச் சுழற்றி ஆகா யத்தில் எறிந்தான். அக் கழுதையாகிய அசுரன் பனைமரங்களின் நுனி யிற்போய் விழுந்தான். அதனால் சில மரங்கள் முறிபட்டுச் சிதறுண்டு பழங்களுடன் கிழே விழுந்தன. அசுரனும் கிழே விழுந்திறந்தான். தேனுகாசுரன் விழுந்த தைக் கண்ட் அவன் இனத்துக் கழுதைகள் பலவும் ஒன்ருய்ச் சேர் ந்து ராம கிருஷ்ணர் களை நோக்கி ஓடிவந்து மேல்விழுந்தன. இவர்



கள் அவைகளை ஒவ்வொன்ருய்க் கால்களைப் பற்றிச் சுழற்றிச் சுழற்றி மரங்களின்மீது

மோதிக் கொன்று அப் பனங்காட்டிற் கழுதை என்பதே இல்லாதபடி செய்துவிட்டனர். பிறகு இடைப் பிள்ளைகள் யாவரும் நிர்ப்பயமாய் வனத்தில் புகுந்து போதுமானவரையில் பழங்களைப் புசித்தார்கள். பசுக்களும் புல் மேய்ந்தன. பொழுது சாய்ந்ததும் எல்லாரும் மந்தைகளுடன் வீடு வந்து சேர்ந்தனர்.



## 16. காளிங்க மர்த்தனம்

ஸ்ரீ பாலகோபாலன் பிருந்தாவனமெங்கும் திரிந்து விளையாடிவரும் நாளில் ஒருநாள் காளிந்தி என்னும் மடுவுக்குப் போயினன். அவனுடன் போன இடைப்பிள்ளைகளும் பசுக்களும் தாகமிகுதியினால் அம் மடுவின் நீரைக் குடிக்க, உடனே மூர்ச்சித்துக் கரையில் விழுந்தனர். அதைக்கண்ட கோபாலன் மூர்ச்சித்தவர்களைக் கருணையுடன் பார்த்துக் கைகளால் தடவியதும் அவர்கள் மயக்கந் தெளிந்து எழுந்தனர். இதற்கு யாது காரணம் என்று யசோதை செல்வன் யோசித்தனன். பின்னர், பக்கலில் உள்ள பெரியோர்களை விசாரித்ததில், அம் மடுவில் காளியன் என்னும் ஒரு பாம்பு தன் குடும்பத்துடன் வசிப்பதனால் அம் மடுவின் ஜலம் மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் உபயோகம் இல்லாமற் போகின்றது என்றும்,

அதற்கு நேரே பறக்கின்ற பட்சிகளும் அந்த விஷத்தின் ஜ்வாலையால் விழுந்து பிராணனை இழக்கின்றன என்றும் பக்தவச்சலனான கண்ணன் அறிந்தனன்.

அப்பாம்பை அம்மடுவினின்றும் துரத்தி, அம்மடுவைச் சுத்தப்படுத்தப் பரமாத்மா திருவுள்ளங்கொண்டு உடனே மேல் வஸ்திரத்தை இடையில் இறுகக்கட்டிக்கொண்டு, மடுவின் ஓரத்திலுள்ள ஒருமரத்தின் மீதேறித் திடீரென அம்மடுவில் குதித்தனன். அவன் குதித்த வேகத்தால் எதற்கும் கலங்காத காளியநாகன் கலங்கி விரைந்து வெளியிற் கிளம்பினான். நமது கோபாலனைத் தனது வாலினால் அவன் பிணிக்க ஆரம்பித்தான். இதைக்கண்ட இடைப் பிள்ளைகள் ஏங்கினர்; பசுக்களும் கன்றுகளும் கண்களில் நீர்விட்டழுதன, நடுங்கின, கதறின, ஓடின. சிலர் யசோதையிடம் சொல்ல ஓடினர். சிலர் பலராமனிடம் போய்க்கூறினர். சிலர் ஓடி நந்தகோபரிடம் நவின்றனர். ஊரிலுள்ளார் எல்லாருங்கூடி ஒரே கூட்டமாக, 'என் செய்வோம்! ஏ பகவானே, எங்கள் கோபாலனைக் காப்பாற்றும்' என்று கதறிக்கொண்டு மடுவை வந்தடைந்தனர். கோபாலனது மகிமையை அறியாத பலர் துரிதமாயோடி அம்மடுவில் இறங்கினர். இதைக் கண்ட பலராமன் அவர்களைத் தடுத்துக்கோபாலனுடைய பெருமைகளை

விரித்து உரைத்து, சற்றுப் பொறுமையுடன் இருக்கும்படி அவர்களைக் கேட்டுக்கொண்டனன்.

இது இப்படி யிருக்க, கோபாலன் தன்னைப் பிணித்த வாலைக் கழற்றிக் கையில் பிடித்துக் கரகரவெனப் பாம்பைச் சுழற்றியும், நீர்மேல் மோதியடித்தும், ஒரு கையால் நாகனது தலையிற் குட்டியும், அவனது முடியின் மீது தனது திருவடியை வைத்தும் நடனம் புரிந்தான். இதனால் காளியன் தலை நசுங்கி உதிரத்தைக் கக்கினான். அப்போது தேவர்கள் கீதங்கள் பாடிக் கற்பகமலர் தூவினர்.



அந்த நாகன் சக்தியற்றுத் தன்மேல் நர்த்தனஞ் செய்யும் மகா புருஷன் ஸ்ரீமந் நாராயணனாய்த்தான் இருக்கவேண்டும் என்று அறிந்து சரண மடைந்தான். அவனுடைய தேவிமார்களும் இனத்தவரும் ஓடிவந்து கண்களில் நீர் பெருக முகுந்தனை முடிபடவணங்கிப் பிழை பொறுக்கும்படி வேண்டினர். அதன்மீது பகவான் அக்காளியனைப் பார்த்து, ‘யமுனாநதியைச்

சார்ந்த இம் மடுவில் நீ இனி ஒரு நிமிஷமும் இருக்தலாகாது. நீயும் உன் தேவிமாரும் மற்றுமுள்ள இனத்தவர்களுடன் இதைவிட்டு உடனே நீங்கிச் சமுத்திர மத்தியிலுள்ள ரமணகம் என்னும் தீவைப் போய்ச் சேருங்கள்' என்று ஆக்யாபித்தனன். தனக்கு உயிர்ப் பிச்சை கொடுத்த உத்தமனை வாயார வாழ்த்திக் காளியன் அந்த நிமிஷமே தன் குடும்பத்தோடு அம் மடுவை விட்டுக் கடலை அடைந்தனன்.

அம் மடுவின் ஜலம் கோபாலன் அருளால் விஷம் நீங்கி அமிர்தமாயிற்று. கரையிலுள்ளார் அனைவரும் கலக்கம் நீங்கிக் காளிங்கமர்த்தனனைக் கட்டியணைத்து முத்தமிட்டுக் களிகூர்ந்தனர். யசோதை கோபாலனை மார்போடணைத்து வீட்டிற்கு அழைத்துச் சென்றாள்.



## 17. தீயுண்ட தாமோதரன்

ஒருநாள் கோபாலனை விட்டு இடைப் பிள்ளைகள் தங்கள் மந்தைகளை ஓட்டிக்கொண்டு பெரிய மரங்கள் சூழ்ந்த ஒரு நாணற் காட்டிற்குள் புகுந்தனர். அப்போது அக் காட்டில் பெருந்தீப் பிடித்தது. புகை நாற்புறமும் சூழ்ந்துகொண்டது. கோக்களும் கோபாலர்களும் கதறினர். கோபாலனைக் கூவி யழைத்தனர்.



எங்கும் நிறைந்த நமது பரந்தாமனுக்கு அவர்கள் எழுப்பிய கூக்குரல் கேளாமலிருக்குமோ? உடனே அவன் அவர்களின் அருகில் தோன்றினான். அவர்களைப் பார்த்து யசோதையின் இளஞ் சிங்கம், 'நீங்கள் பயப்பட வேண்டா, ஒரு கணப் பொழுது கண்ணை மூடிக் கொள்ளுங்கள்' என்றான். அவ்வாறே அவர்கள் செய்தனர்.

அண்டமுண்டவாயன், அப்பெருந்தீயைத் தனது உள்ளங்கையில் ஒரு கனி யுருவாக ஏற்று அமுதுசெய்து கோக்களையும் கோபாலர்களையும் அத் தீ விபத்தினின்றும் விடுவித்தனன். தீனதயாளன் அவர்களை மறுபடியும் கண்களைத் திறக்கும்படி சொன்னபோது எல்லாரும் தீயற்ற ஒரு குளிர்ந்த சோலையில் இருக்கக் கண்டார்கள்.

அவர்கள் இதைக் கண்டதும் கோபாலனது மகிமையை முற்றும் உணர்ந்தார்கள்; 'இவன் மானிடனல்லன், ஆதி முதல்வனாகிய ஸ்ரீமந் நாராயணனே' என்று நிர்மாணித்தார்கள்; மறுபடியும் மாயவனருளால் அந்த எண்ணத்தை விடுத்துத் தங்கள் தோழன் கோபாலனாகவே கொண்டார்கள். அவன் வேணுகானம் செய்து வர, எல்லாரும் தங்கள் தங்கள் வீட்டைச் சுகமே அடைந்தனர்.





## 18. கோவர்த்தன பூஜை

ஆயர்பாடியின் சிறப்பைச் சொன்ன பகுதியில் நந்தமண்டலத்திற்குக் கோவர்த்தன மலை அரணாக இருக்கிறதென்று சொன்னோம் அல்லவா? அம் மலையடிவாரத்தில் வருஷத்திற்கொருமுறை கோபாலர்கள் தேவேந்திரனுக்குப் பொங்கல் வைத்துத் திருவிழா நடத்துவது வழக்கம். அந்தத் திருவிழா அவ் வருடம் செய்யப் பிருந்தாவனத்திலுள்ள ஆயர்கள் பெரு முயற்சிகள் செய்து வந்தனர்.

அதைக் கண்ட கோபாலன் நந்தகோபரை அணுகி, 'தந்தையே, என் இந்தத் திருவிழா

நடத்தவேண்டும்?' என்று கேட்டனன். அதற்கு நந்தகோபர், 'அப்பா, என் இளஞ்சிங்கமே, இந்தத் திருவிழா இந்திரனைக் குறித்துச் செய்வது; இந்திரன் மேகங்களுக்குத் தலைவன். மேகங்கள் சர்வ ஜீவர்களையும் காப்பதற்காக நீரைப் பொழிகின்றன. மேகங்கள் காலந்தவறாமல் பெய்யவும், அதனால் நமது கால்நடைகள் க்ஷேமமாய் ஜீவிக்கவும், மேகங்களுக்கு அதிபதியான இந்திரனுக்கு நாம் வருடந்தோறும் பொங்கலிட்டுப் பூசை செய்கின்றோம். இது நெடுநாளாயுள்ள பழக்கம். இப்படிச் செய்து வருவதனால் சகல சுகங்களையும் நமக்கு இந்திரன் அளிக்கின்றான். எந்தக் காரணத்தாலேனும் செய்யத் தவறினால் இந்திரனுக்குக் கோபம் உண்டாகும். அதனால் யாதாவது தீமை விளையும்' என்று சொன்னார்.

அப்போது கோபாலன் நந்தகோபரையும் மற்றும் சேரியிலுள்ள கிழவர்களையும் பார்த்து, 'நாம் எப்போதும் வனத்திலும் மலையிலும் வாசம் செய்கிறோம்; நமக்குக் கண்கண்ட தெய்வம் நமக்கு அரணாக உள்ள இந்தக் கோவர்த்தன மலையும் இதன் சார்பிலுள்ள வனங்களுமேயாம். இவ் வனங்களிலும் மலைச் சாரல்களிலும் நமது பசுக்கள் வயிறார மேய்ந்து தங்கள் பாலைக் கொடுத்து நம்மைக் காக்கின்றன. ஆதலால், நம்மைக் காக்கும் இப் பசுக்

களுக்கும் இந்தக் கோவர்த்தன மலைக்கும் பூசை செய்தலே தகுதி. அதுவே என் சம்மதம். உடனே வேண்டியன சித்தஞ்செய்யுங்கள், பர்வ தத்திற்குப் பூசை செய்யப் போகலாம். நமது பசுக்களை அலங்கரித்து ஓட்டி நாமும் நல்ல வஸ்திரம் உடுத்துப் பர்வதத்தைப் பிரதட்சிணம் செய்யலாம். வாருங்கள், வாருங்கள்' என்று சொல்லி அவர்கள் மனத்தைத் திருப்பி விட்டான்.

நந்தகோபர் முதலானோர் ஸ்ரீகோபால மூர்த்தி சொல்லியதைக் கேட்டு அதன்படி செய்யத் துணிந்தனர் என்பதும் அதிசயமோ? அவர்கள் மலையடிவாரம் சென்று பொங்கலிட்டனர், பசுக்களை அலங்கரித்துப் பூசித்தனர். அவைகளை ஓட்டிக்கொண்டு கண்ணன் குழலூதப் பாடிக்கொண்டு கோபிகைகளும் கோபாலர்களும் சுத்தமான ஆடை ஆபரணங்கள் தரித்தவர்களாய் அம் மலையைப் பிரதட்சிணம் செய்தனர். இந்தப்படி இடையர்களும் இடைச்சிகளும் அந்தப் பூசையை முடித்துக் கோபாலனுடன் சந்தோஷமாய்ச் சேரியை அடைந்தனர்.



## 19. குன்றைக் குடையாகப் பிடித்தது

சர்வலோக நாதனாகிய ஸ்ரீமந் நாராயணன் கோபாலனாய் ஆயர்பாடியில் பிறந்திருப்பதை இந்திரன் மறந்தான். மறந்து அவன், 'யாரோ ஓர் இடைப்பிள்ளை செல்வச் செருக்கால் வீண் பேச்சுப் பேசி நமக்குக் கோபாலர்கள் இடும் பூசையை மறுத்தனன் அல்லவா? இதோ அந்த இடைச்சேரி இருக்கும் இடம் தெரியா மற் போகும்படி அழித்து விடுகின்றேன். — ஏ மேகங்காள், நீங்கள் போய் யானைத் துதிக் கையேபோல் மழைத் தாரைகளைப் பொழிந்து அச் சேரியை அழியுங்கள். உங்கள் பின்னே யான் ஐராவதமேறி வருகின்றேன்' என்று சொல்லி அனுப்பினான். உடனே யாவரும் கண்டு அஞ்சும்படி சப்தமேகங்களும், மின்ன லுடனும் இடிமுழக்கத்துடனும் சேர்ந்து வந்து இடைச்சேரியைக் கவிந்துகொண்டு கன மாரி பொழிந்தன.

அகாலப் பெருமழையால் அடிபட்ட ஆயர் களும் ஆய்ச்சிகளும் நந்தகோபரிடம் வந்து, 'கோனாரே, நாம் வழக்கப்படி செய்யும் பூசையை உமது பாலன் - பாலருவாயன் - சொன்ன சொற்களைக் கேட்டுத் தவிர்த்து மதிமோசம் போனோமே! இந்திரன் நம்மேல் சீறிப் பெரு மழை பொழிந்து நமது சேரியை அழிக்கின்

ருனே. இப்போது நம்மை யார் காப்பார்கள்?" என்று முறையிட்டனர். அப்போது நந்த கோபரின் பக்கலில் இருந்த வேணுகோபாலன் இவைகள் யாவையும் கேட்டுப் புன்னகை செய்து, 'ஏ கோபிகைகளே, ஏ கோபாலர்களே, அஞ்சாதீர்கள். நான் உங்களைக் காப்பேன்' என்று சொல்லி வெளியே சென்று கோவர்த்தன மலையை அடியோடு பிடுங்கி, ஒரு குழந்தை ஒரு சிறு குடையைத் தாங்குவதே போல, மேலே தூக்கிப் பிருந்தாவனம் எங்கும் ஒரு துளி ஜலங்கூடக் கீழே விழாதபடி தன் சுண்டுவிரல் முனையில் அம் மலையை ஏந்தி நின்ருன். ஏந்தி நின்ற கண்ணன் எல்லாரையும் தங்கள் தங்கள் மந்தைகளுடன் க்ஷேமமாய் அங்கே தங்கியிருக்கக் கட்டளையிட்டான். 'எவ்வளவு காலம் மழை பெய்யினும் உங்களுக்குப் பயமில்லை. இம் மலை உங்கள்மேல் விழாமலிருக்கவும் நான் காக்கிறேன்' என்றும் அவன் தைரியம் கூறினன். சேரியிலுள்ளார் யாவரும் கவலையொழிந்து மழை பொழிவதே தெரியாமல் தங்கள் வேலைகளைக் கவனித்துச் சுகமே இருந்தனர்.

தேவேந்திரன் ஏழுநாட்கள் விடாது மழை பொழியச் செய்தும் தனது எண்ணம் பலியாததனுல், இதன் காரணம் என்னவென்று யோசித்தான். அப்பால் அவன் உற்ற காரணத்தை உணர்ந்து கோபாலன் திருவடியைத் தொழு

தான் ; மேகங்களைத் தங்கள் இருப்பிடம் செல்ல விடுத்தான். குளிரும் நீங்கக் கதிரவன் தன் கிரணங்களோடு பிரகாசித்தான்.

பயங்கரமான காற்று மழை ஒழிந்ததைக் கண்ட மணிவண்ணன் கோவர்த்தனகிரியை அதன் நிலையிற்சேர்த்தான். ஆயர்களை நோக்கி, 'இனி நீங்கள் பயமின்றி வாழலாம். மழையும் விட்டது. ஆறுகளிலும் நீர் வடிந்தது, நம் மந்தைகளை வெளியே ஓட்டி மேய்க்கலாம்' என்று அவன் ஆக்கியாபித்தனன். சேரியில் இருந்த ஆண் பெண் இருபாலாரும் கோபாலனை ஆலிங்கனஞ் செய்துகொண்டு, அன்பின் மிகுதியால் பல்லாண்டு கூறி, பலவாறாக வாழ்த்தினர்.





கோவிந்தன் பட்டாபிஷேகம்

## 20. கோவிந்தன் பட்டாபிஷேகம்

ஆயர் பொருட்டாகக் கோபாலன் நாட்கள் ஏழாகியும் சலிக்காமல் மலையைத்தாங்கி நின்ற பெருமையைத் தேவேந்திரன் உணர்ந்தான். உடனே, தேவராஜன் ஞானம் உதிக்கப்பெற்றுக் கோபாலனை வைகுண்ட நாதன் என்று அறிந்தான்; தன் கண்களாற் கண்ணன் அழகினைக் கண்டு களித்தான். பின்னர், அவன் தான் செய்த குற்றத்தைப் பொறுக்கும் பொருட்டு அவன் திருவடிகளில் விழுந்து வணங்கினான். கருணை வள்ளலாகிய கண்ணன், 'பிழை பொறுத்தேன்; இனி உன் நிலையை உணர்ந்து அகங்காரம் அகற்றி அமராவதியை அடைந்து அரசாள்வாய்' என்று அனுக்கிரகித்தனன்.

உடனே தேவேந்திரன் தெய்வப்பசுவாகிய காமதேனுவையும், ஐராவதமென்னும் வெண்ணிறமுள்ள தனது பட்டத்து யானையையும் அவ்விடம் வரும்படி நினைத்தான். உடனே அவை அவ்விடம் வந்து சேர்ந்தன. அப்போது அவன் கண்ணன் திருவடிகளை மறுபடியும் வணங்கி, அவ்விடம் வந்துள்ள காமதேனுவின் பிரார்த்தனையைக் கேட்டருளும்படி வேண்டினன்.

கண்ணன் இசைய, காமதேனு பகவானைப் பார்த்து,'சர்வேசுவரா, நீ இந்தத் திவ்யாவதாரம்

செய்ததனுல், எங்கள் குலம் ஈடேறிற்று. இந்திரன் பெய்வித்த பெருமழையினுல் யாதொரு தீங்கும் நேராதபடி கோவர்த்தன கிரியை எடுத்துக் குடையாகப் பிடித்து எங்கள் இனமான பசுக்கூட்டத்தைப் பாதுகாத்தாய். ஆதலால், எங்கள் குலத்திற்கு நீயே தெய்வம்; நீயே இந்திரன்; என் மனங்களிக்க எனது பாலேக்கொண்டு உனக்கு நான் அபிஷேகஞ் செய்ய அருள்புரியவேண்டும்' என்றது. அதன் வேண்டுகோளுக் கிணங்கிக் கோபாலன், 'அப்படியே ஆகுக' என்றனன். உடனே காமதேனு நீலநிறமுள்ள கண்ணன்மீது தனது வெண்ணிறமுள்ள பாலேக் கொண்டு அபிஷேகஞ் செய்தது. ஐராவதமும் ஆகாச கங்கையின் ஜலத்தைத் தனது துதிக்கையால் முகந்து கொண்டுவந்து அபிஷேகஞ் செய்ததுமல்லாமல், பாரிஜாத மலர்களே மாலேயாகக் கட்டிக் கோபால மூர்த்திக்குச் சாத்தியது.

காமதேனுவும் ஐராவதமும் தம் மனங் குளிர அபிஷேகஞ் செய்தபின் தேவேந்திரன் திவ்விய ரத்தினங்களிழைத்த கிரீடத்தைக் கோபாலனுக்குச் சாத்தி, கை கட்டி, வாய் பொத்தி எதிரில் நின்று, 'ஏ தேவதேவா, முகுந்தா, வைகுந்தவாசா, அச்சுதா, அமரர் ஏறே, ஆயர்தம் கொழுந்தே, உம்மைச் சேவித்து இவ்விடம் இருத்தலேக் காட்டிலும், தான்

தெய்வலோகஞ் சென்று தேவேந்திரனாய் அரசாளுவது ஒரு பெரும் பாக்கியமோ? உம்மைக் கண்டு அனுபவிக்கும் இந் நாளே எனக்கினிய நன்னாள். யான் இக் கோக்களுக்குச் செய்த பெருந் தீங்கினின்றும் அவைகளைக் காத்ததனால் உம்மைக் கோவிந்தன் (பசுக்களைக் காத்தவன்) என்று உலகம் போற்றட்டும்' என்று சொல்லி, கோபாலனுக்குப் பட்டம் சூட்டிப் பன்முறை வாழ்த்தி நின்றனன். அப்போது தேவ மங்கையர்கள், மேகத்தைக் கண்டு மயில்கள் ஆடுவதுபோல, நீலமேக சாமள வர்ணனை ஸ்ரீ கிருஷ்ணனைக் கண்டு மெய்ம்மறந்து, அவனெதிரில் பலப்பல கீதங்கள் பாடி ஆடினர். வானவர் பூமாரி பெய்தனர். நாரதர் யாழ் வாசித்தனர். வசிஷ்டர் முதலிய தேவரிஷிகள் வாழ்த்தினர்.

தேவேந்திரன் அறியாமற் செய்த குற்றத்தால் அவமானப்பட்டதே அவனுக்குப் போதுமான தண்டனை எனக் கருதி, கோபாலன் அவனை மன்னித்து, அவன் பொன்னுலகம் போய்ச் சுகமாயிருக்க விடை யளித்தனன். பின்னர், முனிவர், அரம்பையர், காமதேனு, ஐராவதம் முதலாயினோர் முறையே விடை பெற்றுத் தத்தம் இருப்பிடம் சேர்ந்தனர்.

## 21. அரிஷ்டாசுர ஹதம்

அரிஷ்டன் என்னும் அசுரன் ஒருநாள் கம்சன் ஆக்ஞையால் பெருத்த தேகமும் மலைபோன்ற திமிலும், ஆகாயத்தில் தெறித்து நிற்கின்ற வாலு முடைய ரிஷபவடிவம் எடுத்தான். அவன் பூமி அதிரும்படி நடந்து முக்காரம் போட்டுக் கொம்பின் நுனியால் மேடுகளை இடித்து யாவரையும் வெருட்டி ஓட்டிக் கொண்டு இடைச்சேரிக்குட் புகுந்தான். அப்



போது சேரியிலுள்ள ஜனங்களும் பசுக்களும் பயந்து ஓடினார்கள். கோபாலர்களும் கோபிகைகளும், 'கண்ணா, கண்ணா, எங்கே சென்றாய்' என்று கலங்கிக் கூவினார்கள். கோபாலன் அவர்களை ரட்சிக்கக்கருதி, ரிஷபவுருவங் கொண்ட அசுரனது கொம்புகளைப் பிடித்து, ஈரத் துணியை முறுக்குவதுபோலத் திருகி எடுத்து

அக் கொம்பினுலேயே மோத அவன் நிலத்தில் விழுந்து கால்களே உதைத்துக்கொண்டு உயிரை விட்டான். இப்படி அரிஷ்டனே ஹதம்செய்து கோபாலன் கோகுலத்தில் உள்ளவர்களேக் களிக்கச் செய்தான்.



## 22. கம்சன் சதியாலோசனே

நாரத முனிவர் தேவகாரியங்களேச் சடிதியில் முடிக்க நினேத்துக் கம்சனேக்காண வடமதுரைக்கு வந்தனர். கம்சன் நாரத முனிவரைப் பணிந்து வரவேற்ருன். முனிவர் பெண் குழந்தை காளியான உண்மையைத் தெரிவித்தார். இன்னும் அவர், 'கோகுலத்தில் யசோதையின் பிள்ளே என வளரும் கோபாலன் தேவகியின் பிள்ளே. கோபாலனுடன் வளருகின்ற பலராமன் ரோகிணியின் புதல்வன், இவர்கள் இருவரையும் உனக்குப் பயந்து வசுதேவன் கோகுலத்தில் ஒளித்துவைத்து வளர்க்கின்ருன். அந்தப் பிள்ளேகளாலேயே பூதனே, சகடன் முதலிய உனது ஜனங்கள் பலரும் மடிந்தனர்' என்னும் ரஹஸ்யங்களே வெளியிட்டனர். அதைக் கேட்ட கம்சன் கடுங்கோபங் கொண்டு வாளேயுருவி, 'வசுதேவனே இதோ கொன்று வருகின்றேன்' என்று புறப்பட்டான்.

அப்போது நாரதர், 'இந்த வசுதேவன் வலி வில்லாப் பேதை. இவனைக் கொல்லுவதனால் என்ன பயன்? அந்தப் பிள்ளைகள்தாம் உனக்குச் சத்துரு' என்று சொல்லி மறைந்தார்.

நாரதர் சென்றபின் கம்சன் கேசி என்னும் கொடிய அரக்கனைக் கூப்பிட்டு, 'நந்தன் சேரிக்கு நீ குதிரை உருவங்கொண்டுபோய் ராமகிருஷ்ணர்களைக் கொன்றுவிட்டு வா' என்று ஆக்கியாபித்தான். பின்னும் சாணூரன், முஷ்டிகன் முதலிய மல்லர்களையும் தனது நண்பர்களாகிய அசுர சிரேஷ்டர்களையும் வரவழைத்து வசுதேவருடைய பிள்ளைகளை ஒழிக்கத் தக்க உபாயங்களைக் குறித்துச் சதியாலோசனை செய்து பின்வருமாறு தீர்மானித்தான். அதாவது:

'அந்த இடைப்பயல்களைக் கேசி கொல்ல முடியாவிட்டால், அவர்களை இங்கு வரவழைத்து, அவர்கள் நமது அரண்மனை வாயிலுக்குள் புகும்போதே பட்டத்து யானையாகிய குவலயாபீடத்தைக்கொண்டு அந்தப் பயல்களை மடிப்பிக்கவேண்டும். அதையும் மீறி உள்ளே வருவார்களானால், சாணூரன் முஷ்டிகன் ஆகிய மல்லர்கள் இருவரும் ராமகிருஷ்ணர்களை மற்போருக்கு அழைத்து அவர்களை வதைக்கவேண்டும். இதற்காக ஒரு பெரிய மல்லரங்கம் அமைக்க வேண்டும். அதில் சுற்றுமண்டபச்

சாலை ஏற்படுத்தி ஜனங்கள் உட்கார ஆசனங்கள் இடவேண்டும். நமது இராஜாங்கத்து இஷ்டர்கள் அனைவரும் அச் சுற்றுமண்டபச்சாலையில் வந்து கூடி, நமது பகைவர்கள் மல்லர்களால் மடிவதைக்கண்டு மகிழவேண்டும்' என்பது.

பின்னர், கம்சன் யதுகுல சிரேஷ்டரும் தனது முதன் மந்திரியுமான அக்குரூரரை வரவழைத்தான். அவரை அவன் தனியே அழைத்துச் சென்று நாரதர் சொல்லிய இரகசியங்களைத் தெரிவித்து, தன் கையால் அவர் கையைப் பிடித்துக் கொண்டு, 'அக்குரூரரே, இவ்வுலகில் எனக்கு நலந்தேடுபவர் உம்மையன்றி வேறு ஒருவரும் இல்லை. நீர் செய்ய வேண்டிய உபகாரம் ஒன்று உண்டு. அது யாதெனில், நீர் கோகுலம் சென்று அங்கு வளர்கின்ற ராம கிருஷ்ணர்களை இங்கு அழைத்து வரவேண்டும். வருகிற சதுர்த்தசி யன்று யான் தனுர்யாகம் செய்வதாயும், அதற்கு நந்தன் காணிக்கையுடனும் பந்து மித்திரர்களுடனும் வரும்படி யான் கட்டளையிட்டதாயும் தெரிவிக்க வேண்டும். நீர் சீக்கிரத்திற் போய் அந்த இடைப்பயல்களை இவ்விடம் சேர்த்தால் நமது குவலயாபீடத்தால் அவர்கள் மடிவது திண்ணம். தவறின், முஷ்டிகன் முதலிய மல்லர்களால் அவர்களை மடிவிப்பேன், அதன்படி செய்க' என்று வேண்டினன்.

அப்போது சாந்த சொரூபியாகிய அக்குரூரர் 'அரசே, நீ இப்போது உனக்கு அபாயம் வாராமலும், உன் எதிரிகள் அழியவும் செய்யக் கருதியது நன்றாகவே இருக்கிறது. ஆனால் நன்மை நாடுபவன் நல்வினை செய்ய வேண்டும். ஆகிலும் நீ இட்ட கட்டளைப்படி நான் செய்யத் தடையில்லை. அவ்வாறே போய் வருகின்றேன்' என்று சொல்லி அக்குரூரர் விடை பெற்றுச் சென்றார். கம்சனும் தன் நண்பர்களுக்கும் அமைச்சர்களுக்கும் அவரவர்கள் செய்யவேண்டிய வேலைகளைச் செய்ய ஆக்கியாபித்து, சபையை விட்டு அகன்றான்.



## 23. கேசியின் தொலைவு

கம்சனால் ஏவப்பட்ட கேசி என்னும் அசுரன் பூமியைப் பெயர்க்கவல்ல குளம்புகளும் ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற பறவைகளைச் சிதறவடிக்கும் பிடரிமயிரும், யாவருக்கும் அச்சமூண்டு பண்ணும் கனைப்பும், குகைபோன்று ஆழ்ந்து அகன்ற வாயும், நீண்ட கழுத்தும், மலைபோன்ற தேகமும் வாய்ந்த குதிரை வடிவமாகி வேகமாய் இடைச்சேரி அதிரும்படி வந்து நுழைந்தான். அவன் கோபாலனைத் தேடி விரைந்து சென்று பின்கால்களால் உதைத்தான். கோபாலன் அக்

குதிரையின் உதை தன்மீது தாக்காமல் விலக்கித் தன் கைகளால் அதன் கால்களைப் பிடித்து முறுக்கி அலட்சியமாகத் தூரத்தில் போய்விழும் படி வீசி எறிந்தான். அசுரன் விழுந்து களைப் பாறித் திரும்பவும் சீறித் தன் குகைபோன்ற வாயைத் திறந்துகொண்டு பாலகோபாலன்மேற் பாய்ந்தான். அப்போது கோபாலன் நகைத்து,



தனது வலக்கையை அவன் வாய்க்குள் புகுத்தி வளரச்செய்ய, அவன் சுவாசம் விடமாட்டாது வேதனை யடைந்து, கால்களை உதறிக்கொண்டு, கண் பிதுங்க நிலத்தில் வீழ்ந் திறந்தான். கோபாலன் கையை வெளியில் வாங்கிக்கொண்டு அவன் உடலை உதைத்துத் தள்ளினான். அது கண்டு தேவர்கள் பூமாரி பொழிந்து நந்தன் மைந்தனைத் துதித்தார்கள்.



## 24. அக்குரூரர் கோகுலம் சேர்ந்தது

கம்சன் ஏவிய மறுநாட் காலையில் அக்குரூரர் மதுரையிலிருந்து கோகுலத்திற்குச் செல்ல இரதம் ஏறினர். பரமயோகிகள் தியானித்துக் காண்டற்கரிய பகவானது திருவடிகளைக்கண்டு தொழப் போகின்றோம் என்ற எண்ணத்தினல் சந்தோஷித்துக்கொண்டே சென்ற அக்குரூரர் மாலைப்போதில் கோகுலத்தை அடைந்தார். இரதம்விட்டு இறங்கிக் கண்ணபிரான் எங்கிருக்கின்றனென்று அங்குள்ள சிறுவர்களைக் கேட்டு, மாட்டுத் தொழுவத்தில் அவன் இருப்பதையறிந்துபோய்ப் பசுக்களைக் கறந்துகொண்டிருக்கும் ராமகிருஷ்ணர்களை அவர் கண்டார்.

வெண்ணிறமும் கருநிறமும் நீண்டதோள்களும் அழகிய திருமுகமண்டலங்களும் உடைய மூத்த பிரானையும் இளைய பிரானையும் கண்டவுடன் அவர் விரைந்தோடி அவர்கள் திருவடிகளில் வீழ்ந்து சேவித்தார். கோபாலன் அவரைத் தனது திருக்கரங்களால் அன்போடு அணைத்துத் தூக்கி எழச்செய்தான். பலதேவனும் தழுவினன். இருவரும் அவரைத் தமது திருமாளிகைக்கு அழைத்துச் சென்றனர்.

பின்பு ராமகிருஷ்ணர்கள் அவர் இளைப்பை ஆற்றி க்ஷேமம் விசாரித்து, அறுசுவையுடன் அன்னமளித்துத் தாம்பூலமும் கொடுத்து உப

சரித்தார்கள். அதன்பிறகு, கம்சனிடம் நாரதர் வந்து சொல்லியதும், அவன் வசுதேவரைக் கொல்ல எண்ணியதும், அதன்மேல் கம்சன் சதியாலோசனை செய்து தனுர்யாகம் செய்ய ஆரம்பித்ததும், நந்தகோபரையும் இவர்களையும் வரவழைக்கக் கருதித் தன்னை அனுப்பியது மான விஷயங்களை யெல்லாம் அக்ரூரர் விவரமாக விண்ணப்பஞ் செய்தார்.



## 25. இராம கிருஷ்ணர்கள் மதுரைக்கு எழுந்தருளல்

கோபாலனும் மூத்தபிரானும் அக்ரூரர் சொன்னவைகளைக் கேட்டு நகைத்தனர். அவர்கள் அவ் விஷயங்களை நந்தகோபருக்கு அறிவித்தனர். நந்தகோபர் அரசன் ஆக்கினைப்படி சேரியில் உள்ள முக்கியஸ்தர்களுடன் காணிக்கைப்பண்டங்கள் சேகரித்துக்கொண்டு மதுரை நகரம்சேர வண்டிகளில் ஏறிப் பிரயாணம் செய்தனர். பாலகோபாலனும் பலராமனும் அக்ரூரருடன் இரதமேறி மதுராபுரியின் அருகேயுள்ள ஓர் உத்தியானவனம் வந்து சேர்ந்தார்கள். அவ் வனத்தில் ராமகிருஷ்ணர்கள் இருவரும் இரதத்தைவிட்டு இறங்கி அக்ரூரரையும் நந்தகோபரையும் நகரம் சேரும்படி அனுப்பினர்.

அக்குரூரர் மதுராபுரியைச் சேர்ந்து தாம் போய்வந்த செய்தியைக் கம்சனிடத்தில் சொல்லிவிட்டுத் தமது இல்லம் சேர்ந்தார்.



ராமகிருஷ்ணர்கள் உத்தியானவனத்தை விட்டு மதுராபட்டணத்தில் நந்தகோபர் தங்கியுள்ள விடுதிக்கு வந்து அன்னமுண்டு அன்றிரவை அங்கே கழித்தனர். சூரியன் உதயமானவுடன் கோபாலனும் மூத்தோனும் இக்கொடிய கம்சனை மாமனென்று பாராட்டாமல் மடித்தலே தகும் என்று தீர்மானித்து, யாகமண்டபம் அடையப் புறப்பட்டனர்.



## 26. குவலயாபீட வதம்

கம்சன் ஆக்ஞையின்படி பணியாளர் மல்லரங்கத்தை ஒழுங்கு படுத்தி அலங்காரஞ் செய்தார்கள். ஆசனங்கள் அணி வகுத்து அமைக்கப்பட்டன. அவைகளில் அரசர்களும், பிராமணர்களும், நகரமாந்தரும் அவரவர்கள் அந்தஸ்துக்கு உரிய இடங்களில் அமர்ந்தார்கள். கம்சன், மந்திரிகள் சூழ்ந்து நிற்க, தனக்கென அமைத்த ஆசனத்தில் அமர்ந்தான். நந்தகோபர் முதலியவர்கள் அரசனுக்குக் காணிக்கை செலுத்தித் தங்களுக்கு



ஏற்படுத்தியிருந்த இடங்களில் உட்கார்ந்தார்கள்.

பலராம கிருஷ்ணர்கள் கம்பீரமான நடையுடன் அரண்மனை வாயிலின் உட்புகுந்தார்கள். அங்கே சர்வாலங்காரத்துடன் நின்ற குவலயாபீடமென்னும் பட்டத்துயானை பாகனால் தூண்டப்பெற்றுக் கோபாலனை எதிர்த்துத் துதிக்கையால் அவனைப் பற்றியது. கோபாலன் துதிக்கையில் இருந்து வழுவிக் கீழே நின்று, அந்தத் துதிக்கையைப் பற்றி இழுத்து அதைக் கையால் புடைத்துக் கீழே தள்ளினான். அவன் அதன்மேல் சிங்கம்போலப் பாய்ந்து தந்தத்தை முறித்தனன். முறித்த தந்தத்தால் யானையையும் அதன் பாகனையும் அடித்தும் குத்தியும் கொன்று, சிறிதும் ஆயாசமில்லாமல் கோபாலன் தனது தமையனுடன் மற்களத்திற்குள் பிரவேசித்தான்.



## 27. மற்போர்

அங்கே சுற்று மண்டபத்தில் உள்ளார் அனைவரும் இவர்களைக் கண்டு மனங்களித்தனர்; பகவானது திவ்வியமங்கள சொரூபத்தைக் கண்டு ஆனந்தபரவசராயினர்; கோபாலனது பாலலீலைகளை யெல்லாம் ஒருவர்க் கொருவர் பேசி மகிழ்ந்திருந்தனர்.

இப்படி ஜனங்கள் பேசிக்கொண் டிருக்கையில் மற்போர் தொடக்கக் குறியான வாத்தியம்

முழங்கியது. சாணூரன் என்னும் மல்லன் கோபாலனையும் பலதேவனையும் கூப்பிட்டு, 'ஏ நந்தகுமாரர்களே, நீங்கள் வலியவர்கள். மல்லயுத்தம் செய்ய வல்லீர்கள். நமது மகாராஜா உங்கள் பராக்கிரமத்தைக் கேள்விப்பட்டு உங்களை இவ்விடம் வரவழைத்தார். நீங்கள் வீரர்களாயின் எங்களுடன் மற்போர் புரியுங்கள்' என்றான். அதற்குக் கோபாலன், 'மல்லர்களே, நீங்கள் பெரிய காட்டானைகளைப்போல உருவில் பெருத்தும், வயதில் முதிர்ந்தும் இருக்கிறீர்கள். நாங்களோ உருவத்திலும் வயதிலும் சிறியவர்கள். நீங்கள் வெட்கமில்லாமல் எங்களை மற்போருக்கு அழைக்கின்றீர்கள். ஆனாலும் நாங்கள் சுத்தவீரர்களாதலால் உங்கள் இஷ்டப்படி செய்யத் தடையில்லை, வரலாம்' என்று சொல்லி, தான் சாணூரனுடனும் மூத்தபிரான் முஷ்டிகனுடனும் மல்லயுத்தம் செய்யச் சித்தமாயினன்.

இவர்கள் போர்தொடங்கித் தோள்களையும் தொடைகளையும் தட்டிக்கொண்டு ஒருவரையொருவர் பிடித்தும் விட்டும் இடமும் வலமுமாக உலாவியும், கைகளையும் கால்களையும் கோத்தும் இழுத்தும், ஒருவரை யொருவர் வெல்ல வேண்டுமென்ற எண்ணத்தோடு தலையைத் தலையாலும், மார்பை மார்பாலும் தாக்கிப் புடைத்தனர்; இன்னும் பற்பல செய்கைகள் பலமுறை செய்து மல்லர்களைப் பலம் ஒடுங்கச்

செய்தனர். அப்படி யிருந்தும் சாணூரன் கோபாவேசத்துடன் ஓடி வந்து கோபாலன் திருமார்பில் அறைந்தான். கோபாலன் அதற்குச் சிறிதும் சலிக்காமல் அவன் கைகள் இரண்டையும் சேர்த்துப் பிடித்திழுத்துச் சுழற்றி



நிலத்தின்மேல் மோதினன். அதனல் அவன் உயிர் நீங்கி விழுந்தான். பலபத்திரனும் முஷ்டிகனை உள்ளங்கையால் ஓங்கி அடித்தான். அவ்வடியைத் தாங்காது மல்லன் பெருங் காற்ருல் விழும் மரம்போல உயிர் துறந்து விழுந்தான். அப்போது ஆயர்கள் ஆர்ப்பரித்தனர்.



## 28. கம்ச வதம்

ராமகிருஷ்ணர்கள் மற்போரில் ஜயமடைந்ததைக் கம்சன் கண்டு கர்ச்சித்தான். அவன் தன் பணியாளரைக் கூவி, 'இந்தத் துஷ்டப் பயல்களைப் பிடியுங்கள், அடியுங்கள்; வசுதேவனைக் கொல்லுங்கள்; நந்தகோபனைச் சிறைப்படுத்துங்கள்' என்று ஏவினான். இவைகளை யெல்லாம் கேட்ட கோபாலன் கோபித்து, வேகமாய் எழுந்து, உயர்ந்த ஆசனத்தில் இறுமாப்புடன் வீற்றிருந்த கம்சனை, பாம்பைக் கருடன் பற்றுவது போல், அவன் தலைமயிரைப் பிடித்து இழுத்துத் தரையில் விழும்படி தள்ளினான். அவன் இடிவிழுந்தாற்போலக் கீழேவிழுந்து, கத்தியும் கையுமாய்ச் சடிதியில் எழப்பார்த்தான். அப்போது கோபாலன் முழங்காலால் அவனை மோதி உதைத்துத் தள்ளிக் கழுத்தைப் பிடித்து இறுக்கி மாய்த்தான். இப்படிக் கம்சன் இறந்ததைக் கண்டு சுற்று மண்டபத்திலிருந்தார் அனைவரும் நடுங்கிக் கூவினர்.

ஸ்ரீமந் நாராயணனால் தனக்கு மரணம் வருமென்று அஞ்சி, உண்ணல், உலாவல், துயிலல் முதலிய தொழில்கள் செய்யும்போதெல்லாம் பகவானையே நினைந்திருந்து முடிவில் அவர் திருமேனி தன்மேல் தாக்கப்பெற்றதால் கம்சன் அந்தப் பரந்தாமனது சாரூப்பியம்

பெற்றுப் பரமபதத்தில் நித்தியானந்தப் பேறு



பெற்றான். தேவர்கள் முனிவர்கள் மற்றும் மேதி

னியிலுள்ளார் யாவரும் புஷ்பமாரி பெய்து வாத்தியம் முழக்கித் தேவகி தனயன் குணானு பவங்களைப் பாடி ஆடினர்.

அக்குரூரர் கம்சனுக்குச் செய்யவேண்டிய கருமங்களை அவன் இனத்தார்களைக் கொண்டு நடப்பித்தனர். கோபாலன் பலராமனுடன் சென்று தாய் தந்தையர்களான தேவகியையும் வசுதேவரையும் கண்டு, அவர்களுக்கு வந்தனம் செய்து நின்றனன். அவர்கள் தங்கள் குமாரர் களைக் கண்டு, கண்ணீர் சொரிந்து, பேச நெடு நேரம் வாய் எழாமல் இருந்து, பின்பு தேறி அவர்களை மடிமேல் வைத்துத் தழுவி மிகுந்த மகிழ்ச்சி யடைந்தனர். அப்போது கோபாலன் தாய் தந்தையர்களுக்கு இன்சொல் சொல்லிக் களிப்பித்தனன்; பின்பு சிறையிலிருந்த கம்ச னது தந்தை உக்கிரசேனனை விடுவித்து மதுரா புரிக்கு அரசனாக்கினன்; கம்சனுக் கஞ்சி வேறு தேசங்களுக்குப் போயிருந்த யதுகுலத்தவர்களை யெல்லாம் வரவழைத்துப் பழயபடி அவர் களை நாட்டில் வாழச் செய்தனன். கோபால னது கிருபாகடாட்சத்தால் யாவரும் எவ்வகைத் துயரமுமின்றி இன்பம் பெருகி வாழ்ந்தார்கள்.



## 29. ஜராசந்த யுத்தமும் துவாரகை யடைதலும்

கம்சன் மடிந்தபின்பு அவன் மனைவிக ளான அஸ்தி, பிராஸ்தி என்பவர்கள் தங்கள் பிதாவான ஜராசந்தன் என்கிற மகதநாட்டரச னிடம்போய்த் தங்களுக்கு நேரிட்ட துன்பத் தின் வரலாற்றை விவரமாகச் சொன்னார்கள். அதைக்கேட்டு ஜராசந்தன் அதிக சோகமும் கோபமும் உண்டாகி, 'உலகில் யாதவப்பூண்டே இல்லாமற் போகும்படி செய்கின்றேன்' என்று சபதம் கூறினன். அவன் தன் எண்ணத்தை முடிக்க மதுராபுரியைப் பதினெட்டு முறை பெரும் படையைக் கூட்டிக்கொண்டு போய் வளைத்துக்கொண்டு ராம கிருஷ்ணர்களுடன் போர்புரிந்தான் ; அப்படிச் செய்த யுத்தங்களில் ராமகிருஷ்ணர்களை ஜயிக்கமுடியாமல் தன் எண் ணத்தை விடுத்து எஞ்சிய சேனையுடன் தனது ராஜதானியாகிய கிரிவிரசத்தை அடைந்தான்.

இதனிடையில் காலன் என்னும் யவன தேசத்து மிலேச்ச அரசன் பெரிய சேனையைக் கூட்டிக்கொண்டு வந்து மதுராபுரியை வளைத் துக் கொண்டான். அப்போது கோபாலமூர்த்தி யதுக்களுக்கு இவ்விதமான படை யெடுப்புக் களினல் உண்டாகும் ஆபத்துக்களை நீக்கக் கருதி, பகைவர்கள் புகவரிதான ஓரிடம் தேடி

அங்கே தம்மவரைக் குடியேற்ற விசுவகர்மா வைக்கொண்டு கடல் நடுவில் ஒரு திவ்விய நகரத்தை உண்டாக்கி அதற்குத் துவாரகாபுரி யென்று பெயரிட்டனன். கோபாலன் தனது மாயா சக்தியினால் மதுராபுரியிலுள்ள யாதவர்கள் முதலிய யாவரையும் ஒருவருக்கும் தெரியாமல் அந் நகரில் சேர்ப்பித்தனன். பின்பு கோபாலன் கையில் ஓர் ஆயுதமுமின்றித் தனியே சென்றான். யவனன் நிராயுத பாணியாய்த் தனியே செல்லும் கோபாலனைக் கண்டு அவன் பின்னே தொடர்ந்து சென்றான்.

இதுதான் சமயமென்று கோபாலன், பின் தொடர்ந்தோடி வருபவனுக்குக் கையில் அகப்படுவதுபோலக் காட்டி, இழுத்துக் கொண்டு போய் முசுகுந்த சக்கரவர்த்தி நித்திரை செய்யும் குகைக்குள் நுழைந்து மறைந்தான். யவனன் உள்ளே நுழைந்ததும் நித்திரை செய்யும் முசுகுந்த சக்கரவர்த்தியைக் கோபாலன் என்று நினைத்துக் காலால் உதைத்தான். விழித்தெழுந்த முசுகுந்தர் எதிரிலிருந்த காலனைக் கோபத்துடன் பார்த்தார். அந்தக் கோபப் பார்வையில் உண்டான தீயினால் அவன் எரிந்து நீறானான். பின்னர், பகவான் முசுகுந்தச் சக்கரவர்த்தியின் முன் தோன்றி, அவர் வேண்டிய வரங்களை அளித்துத் துவாரகைக்குச் சென்றார்.



## 30. ருக்குமிணி விடுத்த தூது

எல்லா வளங்களும் நிறைந்த விதர்ப்ப நாட்டில் பீஷ்மகன் எனப் பெயர்கொண்ட ஓர் அரசன் இருந்தான். இவனுக்கு ருக்குமி முதலிய ஐந்து குமாரர்களும், ருக்குமிணி என்ற ஒரு குமாரியும் பிறந்தனர். இந்தப் பெண்மணி தன் தந்தை வீட்டுக்கு வருபவர்களினால் கோபாலனது அழகு, திறம், குணம் முதலியவற்றைக் கேள்விப்பட்டு அவனே தனக்கேற்ற கணவன் என எண்ணினாள். அப்படியே கோபாலனும் அறிவு, குணம், மேன்மை, ஒழுக்கம் முதலிய இயல்புகளுக்கு இருப்பிடமாகிய ருக்குமிணி தேவியைத் தனக்கேற்ற மனையாளென்று எண்ணினான். காரணமின்றிக் கண்ணனைப் பகைத்த ருக்குமி தனது நண்பன் சிசுபாலனுக்கு ருக்குமிணியை அளிக்க எண்ணினான். அதை அறிந்த ருக்குமிணிபிராட்டி மனம் வருந்தி நம்பிக்கையுள்ள ஒரு பிராமணரை ஸ்ரீ கோபாலனிடம் அனுப்பித் தனது அபிப்பிராயத்தைத் தெரிவித்தனள்.

அந்தப் பிராமணர் துவாரகாபுரி சென்று பரம புருஷனைக் கண்டு தேவியின் எண்ணத்தைத் தெரிவித்தனர். பிராமணர் சொன்னதைக் கேட்டுப் புருஷோத்தமன் சந்தோஷித்தான். 'இவ் விவாகத்துக்கு ருக்குமி என்ன தடை செய்

தாலும், அவன் எத்தனை பெயர்களோடு வந்தாலும் அவர்களை யெல்லாம் எளிதில் ஓட்டி ருக்குமிணியை எனக்கு உரிய மனைவியாக்கிக் கொள்வேன்' என்று அவன் சொல்லினன். கலியாணத்திற்காக ருக்குமி குறித்திருக்கும் தினம் நட்சத்திர முதலியவைகளையும் பிராமணர் சொல்லத் தெரிந்துகொண்டு, கோபாலன் துரிதமாகச் செல்லும் ஓர் இரதத்தைக் கொண்டுவரச்செய்து, அதில் தானும் பலபத்திரனும் தூதுவந்த பிராமணரும் ஏறி, யாதவவீரர் தன்னைச் சூழ்ந்து வர, விதர்ப்பதேசம் சேர்ந்தனன்.



## 31. தேவியைத் தேரேற்றியது

இஃது இவ்வாறிருக்கப் பீஷ்மகன், ருக்குமியின் பிரியப்படி, சிசுபாலனுக்கு ருக்குமிணியை விவாகம் செய்து கொடுக்க நிச்சயித்து நகரமெங்கும் கொடிகளாலும், தோரணங்களாலும் அலங்கரிக்கச் செய்தனன். நகரத்திலுள்ளார் அனைவரும் ஆடையாபரணங்களணிந்து மிகச் சிறப்பாய் விளங்கினர்.

முகூர்த்தம் அணுகியதும் சுமங்கலிகள் ருக்குமிணியைத் திருமஞ்சனமாட்டி அலங்கரித்துப் பீஷ்மகனது குலாசாரப்படி அம்பிகை

யின் ஆலயத்திற்கு அழைத்துச் சென்றனர். அங்கு ருக்குமிணி அம்பிகையின் திருமுன்னர் நின்று அர்ச்சித்துத் துதித்துத் தரிசித்தாள்; 'புருஷோத்தமனை கோபாலன் என்னைப் பரிணயம் செய்யும்படி திருவுள்ளம் வைக்க வேண்டும்' என்று பிரார்த்தித்தாள்; பின்னர், சுமங்கலிகளைப் பூசித்தாள். அவர்கள் ஆசிர்வாதம் செய்தார்கள். கன்னிகை அம்பிகைக்கு நமஸ்காரம் செய்து தோழியின் கையைப் பற்றிக்கொண்டு வெளியில் வந்தனள். பிராட்டி வெளிவரக் கண்டதும் கோபாலன் மகிழ்ந்து அக் கன்னிகையைத் தன் இரதத்தின்மீது ஏற்றிக்கொண்டு, சிசுபாலனும் பிற அரசர்களும் பார்த்து நிற்க, பலபத்திரனுடன் தமது நகரத்திற்கு ஏகும் வழியே இரதத்தை வேகமாகச் செலுத்திச் சென்றான்.





அப்போது ஜராசந்தன் சிசுபாலன் முதலிய அரசர்கள் ஆயுதபாணிகளாய், குதிரைப் படை பின்பற்றி வரக் கோபாலனைத்தொடர்ந்து சென்றனர். பகைவர் பின் தொடர்ந்து வருவதைக் கண்டு ருக்குமிணி அஞ்சிக் கோபாலன் திருமுகத்தை நோக்கினள். குறிப்பறிந்த கோபாலன், 'நீ அஞ்சவேண்டா ; நம்முடன் வருகின்ற யாதவவீரர்கள் எதிரிகளை அடித்து ஓட்டுவார்கள்' என்று தைரியம் சொன்னான். அப்போது பலபத்திரன், ஜராசந்தனுடைய படைகள் தலை வேறு, கால் வேறு ஆகும்படி அம்பு மழை பொழிந்து அவர்கள் முதுகு காட்டி ஓடச் செய்தான்.

இதைக்கண்ட ருக்குமி தானும் ஓர் இரத மேறிக் கோபாலனைத் தொடர்ந்து, 'நில் நில்' என்று சொல்லிக்கொண்டே வந்தான். அவன் தன் வில்லை வளைத்து அம்புகளைப் பூட்டிக் கோபாலன்மேல் எய்தான். அவன் நமது கோபாலனைத் திருடனென்றும் மோசக்கார னென்றும் பலவாறாக இகழ்ந்து பேசினான். அப்போது கோபாலன் நகைத்துக்கொண்டே தான் வில்லை வளைத்து அம்பைவிட்டு அவன் விடுத்தகணைகளை ஒடித்து, அவன் தேர், குதிரை, பாகன், வில் முதலியவைகளை அறுத்துத் தள்ளி னான். ருக்குமி வாள் ஒன்றைக் கையில் பிடித் துக் கோபாலன்மேல் பாய்ந்தான். கோபாலன் அவன் கைவாளைத் தட்டிக் கீழே விழச்செய்து அவனைக் கொல்லத் தன் வாளை எடுத்தான். அப்போது ருக்குமிணிதேவி நாதன் திருவடி களில் விழுந்து, தன் அண்ணன் செய்துள்ள பிழைகளைப் பொறுத்து ரட்சிக்க வேண்டும் என்று பிரார்த்தித்தனள். கோபாலனும் அப் படியே அருள்செய்து அவனை ஒரு வஸ்திரத் தால் தேர்க்காலில் பிணித்துக் கட்டினன். பின் னர் பலபத்திரன் வேண்டுகோளால் அவனை அவிழ்த்து விட்டனன்.



## 32. திருக்கல்யாணம்

அரசர்கள் அனைவரையும் வென்று கோபாலன் ருக்குமிணி பிராட்டியைத் துவாரகாபுரிக்கு அழைத்துக்கொண்டு வந்தான். அப்போது அந் நகரில் வீடுதோறுமுள்ள ஜனங்கள் யாவரும் மகத்தான உத்ஸவம் கொண்டாடினார்கள். ஒவ்வொருவரும் நன்றாய் அலங்கரித்துக் கொண்டார்கள். ஒவ்வொரு வீட்டுக்கும் துவஜம், தோரணம் கட்டி, வாழை, கமுகு முதலியவைகளை நிறுத்தி, வாயில்களில் பூர்ண கும்பங்கள், தீபங்கள் வைத்து, தேவேந்திரலோகம் இதுதானோ என்று சொல்லும்படி அலங்காரம் செய்தார்கள். மனம் மொழி மெய்களில் ஒன்றுபட்ட வதூவரர்களுக்கு ஜனங்கள் விசேஷமான காணிக்கை எடுத்துக்கொண்டு எதிர் சென்றார்கள். யானை, தேர், குதிரை, பல்லக்கு, மனிதர் முதலியவைகளால் நெருங்கி யிருக்கும் வீதிகளில் ஜனங்கள் சந்தோஷத்தால் இங்குமங்கும் விரைந்தோடியவர்களாய் இருந்தார்கள்.

கோபாலன் ருக்குமிணி தேவியுடன் இல்லம் சேர்ந்ததும் உக்கிரசேனன் முதலிய பெரியோர்கள் நல்ல சுபமுகூர்த்தத்தில் கேகயம், விதர்ப்பம், யது, குந்தி, குருகுலத்தவர் முதலானவர்களுக்கெல்லாம் திருமணப் பத்திரிகை அனுப்பினார்கள். பல தேசத்து மன்னர்களும்



திருக்கல்யாணம்

குறித்தகாலத்திற்குள் வந்து சேர்ந்தனர். புரோகிதரான கர்க்காசாரியர் நல்ல சுபமுகூர்த்தத்தில் வதூவரர்களுக்கு நலங்கிடுவித்து மங்கள ஸ்நானம் செய்வித்தனர். பின்னர், புரோகிதர் மணமக்களைச் சர்வாலங்காரமும் செய்யச்செய்து உபசாரத்துடன் அழைத்து வந்து, மாலை மாற்றி, சுமங்கலிகள் மங்கல கீதம் பாட, ஸ்ரீ கோபாலனைக் கொண்டு ஸ்ரீ ருக்குமிணீதேவிக்குத் திருமங்கல்ய தாரணம் செய்வித்தனர்.

அப்போது சங்கீதம் ஒருபுறம் கேட்டது. மேளவாத்தியம் மற்றொருபுறம் முழங்கிற்று. பலவிதமான தானதருமங்கள் செய்யப்பட்டன. வந்திருந்தவர்கள் எல்லாரும் தேவாமிர்தத்துக்கு ஒப்பான போசனம் அருந்தித் தாம்பூலம் பெற்று மகிழ்ந்தேகினர். இப்படித் திருக்கல்யாண மகோத்ஸவம் ஏழு நாட்கள் தேவர்களும் அதிசயிக்கும்படி சம்பிரமமாக நடந்தது.

துவாரகையில் ஜெகன் மாதாவாகிய ஸ்ரீ ருக்குமிணீ பிராட்டி சமேதராய் வீற்றிருந்த ஸ்ரீ கோபாலமூர்த்தியாகிய பரம புருஷனைச் சேவித்துச் சகல ஜனங்களும் எல்லா விருப்பங்களையும் பெற்றுச் சுகமாய் வாழ்ந்திருந்தார்கள்.





வாழி வாழி குந்திமைந்தன் வலவன் வாழி வாழியே
வாழி வாழி யவனியுய்ய வந்த நாதன் வாழியே
வாழி வாழி காளமேக கண்ணன் வாழி வாழியே
வாழி வாழி வாசுதேவன் வாழி வாழி வாழியே.



Caxton Press, Madras — 1927 (C)